# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
20.8.2006 ரூ.8.00
80 பக்கங்கள்



திருமணப் பின்னணி!

நட்பு... காதல்... நான்!

யுகபாரதியின் புதிய தொடர்! 8





சுஜாதா கட்டுரை 46



அரசியல் சிக்கலில் செல்வி? 51



இலவச கலர் டி.வி. – ஒரு பார்வை 78

"கடலும் வானும் முத்தமிடும் இடம் கண்ணுக்கு அழகாகத் தெரியும். ஆனால் அதை நோக்கி நீந்திச் செல்லச் செல்ல அது விலகித்தான் போகுமே யொழிய அதை அடையவே முடியாது! ஆரம்பத்தில், அப்படிப்பட்ட ஓர் இலக் கைத்தான் என் இசைவழியே அடைய

# ஒரு மேடை... இரு சூடாமணிகள்!

முயன்றேன். அந்த முயற்சியில் ரசிகர் களை என்னால் மகிழ்விக்க முடிய வில்லை... கச்சேரி முடிந்து வீட்டுக்குப் போனால் அவர்களுடைய மலர்ந்த முகங்கள் என் கண்ணுக்குள் தெரிய வில்லையே என்று வருத்தம் வந்தது. வான்முகடை நோக்கி நீந்துவதை நிறுத் தினேன். இருக்குமிடத்தில் இருந்தபடி எனக்குத் தெரிந்தவற்றை ரசிகர்கள் விரும்பும்வகையில் வழங்கத் தொடங் கினேன். வீடு திரும்பியபோது அந்த மலர்ந்த முகங்கள் என்கூட வந்தன. அதே இசைக்கடல் எனக்கு ஆனந்த சாகரமாக மாறியது. என் இதயத்தை இறைவன் தனது வாசஸ்தலமாக்கிக் கொண்டான்."



• அருணா சாய்ராம்

- பேசியவர் அருணா சாய்ராம். ஸ்ரீ கிருஷ்ணகான சபா வழங்கிய சங்கீத சூடாமணி விருதைப் பெற்றபோது அருணா ஆற்றிய ஏற்புரை இது.

விழா மேடையில் வாழ்த்துரை வழங்கிய வித்வான் பி.எஸ்.நாராயண சாமி, அருணாவின் இசையில் ஏற்பட் டுள்ள மாற்றத்தைச் சுட்டிக்காட்ட அதற்குத்தான் மேற்படி கவித்துவமான விளக்கத்தை அளித்தார் அருணா!

ஜாலங்களை பகிஷ்கரித்து ஜனரஞ்ச கத்தை புறக்கணித்த டி.பிருந்தாவிடம் பயின்றவர் அருணா. அப்பாணியி லிருந்து நிறைய மாறிவிட்டாலும் பிருந்தா பாணிக்கு உரிய சில அம்சங் களைத் தாம் தக்கவைத்துக் கொண் டிருப்பதாகத் தெரிவித்தார்.

அதே மேடையில் ஆசார்ய சூடா மணி விருது (தலைசிறந்த இசையா சிரியருக்கானது) பெற்றார் சீதா ராஜன். பால பிருத்தம் என்னும் இவரது பள்ளியில் மாணவர்கள் இசையின்



● சீதா ராஜன்

அனைத்து அம்சங்களிலும் பயிற்சி பெற்று வருகிறார்கள். ஏறத்தாழ பழைய கால குரு குலவாசம் மாதிரி நடத்தப்படுகிறது இப்பள்ளி.

"பல இசை மாணவர்களின் திறனைப் பரிசோதித்துக்கொண்டே வருகையில் சீதாவின் மாணவர்களைச் சுலபமாகக் கண்டு பிடித்துவிடலாம் - தனித்தரமான பயிற்சி பெற்றுப் பாடுபவர்களாய் இருப்பர்" எனச் சான்றிதழ் வழங்கினார் பி.எஸ்.நாராயணசாமி.

"ஒரு பொக்கிஷத்தை உன்னிடம் தருகிறேன். அதை நீ அடுத்த தலைமுறைக்கு வழங்க வேண்டும். நிறைய பேருக்கு வாரித் தரவேண்டும்" என தமது குரு செம்மங்குடி கட்டளையிட்டதை நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தார் சீதா ராஜன். அன்றே தமது இசை இலக்கும் வாழ்க்கை இலக்கும் ஒருங்கே நிர்ணயிக்கப் பட்டுவிட்டதாகச் சொன்னார். விருதின் பெருமை இவ்விலக்கை இனம்காட்டிய குருவுக்கே உரியது என்றார்.

இலக்கிலிருந்து மாறாத 'ஆச்சர்ய' சூடாமணி; இலக்கை கைவிட்டும் இன்ப நிறைவு காணும் 'சாகஸ' சூடாமணி...!

- கர்நாடக இசையுலகில் இருவருக்குமே மதிப்பு உண்டு என்பதை உணர்த்தியது கிருஷ்ணகான சபாவின் விழா மேடை; 'இருவருக்குமே எங்கள் அங்கீகாரம் உண்டு' என்றது அரங்கில் எழுந்த கரவொலி!

**- ரஸிகா**




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**
**ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.440/-**
**ஆறு மாதம் : ரூ.220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.**

“மும்பையிலிருந்து ஜோதிகாவை அழைத்துக்கொண்டு வந்து நான் அறிமுகப்படுத்தியபோது, தமிழ்த் திரைப்பட உலகம், அவரை ஒரு ஹீரோயினாக ஏற்றுக்கொள்ள வேண்டுமே என்று பிரார்த்தனை செய்தேன். இன்று அவர் தமிழ்ப்பட உலகத்தால் மட்டுமின்றி, ஒரு தமிழ்நாட்டு மருமகளாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார் என்பதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி” என்கிறார் இயக்குனர் வஸந்த்.

இவர்தான் 'நேருக்கு நேர்' படத்தின் மூலமாக சூர்யாவை தமிழ் சினிமாவுக்கு அறிமுகப்படுத்தினார். இவருடைய 'பூவெல்லாம் கேட்டுப் பார்' படத்தின் மூலமாக அறிமுகப்படுத்தப்பட்டவர் தான் ஜோதிகா. பூவெல்லாம் கேட்டுப் பார்த்த இந்த ஜோடி, அதன்பின் 'உயிரிலே கலந்தது', 'காக்க காக்க', 'பேரழகன்', 'மாயாவி' எனத் தொடர்ந்து சேர்ந்து நடித்தது. அடுத்து இவர்கள்


• வஸந்த்

நடித்து வரவிருக்கும் படம் 'சில்லுன்னு ஒரு காதல்'. அதற்குள் இவர்களுக்குள் மலர்ந்த நிஜக் காதல், கல்யாணம் வரை வந்து விட்டது.

ஓர் ஆங்கில நாளிதழுக்காக சூர்யா-ஜோதிகா இருவரும் சந்தித்துப் பேசினார்கள். அதில் சூர்யாவிடம் “எத்தனையோ ஹீரோயின்களுடன் நடித்திருக்கிறீர்கள். என்னுடைய நடிப்பைப் பற்றி உங்கள் கருத்து என்ன? என்று ஜோ கேட்ட கேள்விக்கு, சூர்யாவின் பதில்: “நடிப்பிலும் சரி, மற்ற விஷயங்களிலும் சரி, உங்களுடைய முழுமையான ஈடுபாடு பாராட்டுக்குரியது. பூவெல்லாம் கேட்டுப் பார் படப்பிடிப்பின்போது, ஒரு பரீட்சைக்குப் படிக்கும் மாணவியைப் போல வசனங்களை நீங்கள் மனப்பாடம் செய்ததை என்னால் மறக்கவே முடியாது. எந்த கேரக்டராக இருந்தாலும், அணியும் உடை மிகவும் கண்ணியமாக இருக்க வேண்டும் என்ற உங்கள் பாலிசி எனக்கு ரொம்பப் பிடிக்கும். இன்றைக்கு சினிமா உலகில் இருப்பவர்களில் நீங்கள்தான் பெஸ்ட்!”

ஜோதிகா தன்னுடைய இணைய தளத்தில், சூர்யாவைப் பற்றி இப்படிக் குறிப்பிடுகிறார்... “நான் நூறு ஹீரோக்களுடன் நடித்தாலும்கூட சூர்யா எனக்கு ரொம்ப ஸ்பெஷல். அவர் என்னுடைய மிக நெருங்கிய நண்பர்களில் ஒருவர். அவர் தன்னைப் பற்றிய விஷயங்களையெல்லாம் என்னுடன் பகிர்ந்து கொள்வார்.”

# சில்லுனு ஒரு கல்யாணம்

சூர்யா - ஜோதிகா திருமணப் பின்னணி பற்றிச் சொல்லுங்களேன் என்று வஸந்தைக் கேட்டால், “சூர்யா ரொம்பவும் ரிசர்வ்டு டைப். அவர் வளர்க்கப்பட்ட முறை எனக்கு நன்றாகத் தெரியும். அவர் காதலித்துக் கல்யாணம் செய்வார் என்று நான் துளியும் எதிர்பார்க்கவில்லை. ஜோதிகா நல்ல கலகல டைப். என்னுடைய 'ரிதம்' படத்தில் அவர் நடித்த போது ஒரு நாள் எதேச்சையாக சூர்யா பற்றி நான் ரொம்பவும் பாராட்டி ஏதோ சொல்ல, அதற்கு ஜோதிகா, நான் சற்றும் எதிர்பாராதவிதமாக, நான் சொன்னவற்றை ஆமோதித்துப் பேசினார். 'உனக்கு

எப்படித் தெரியும்?' என்பது போல நான் ஜோதிகாவைப் பார்த்தபோது, அவர் பதில் எதுவும் சொல்லாமல் சற்றே வெட்கத்துடன் அமைதியாக இருந்தார். நான் அவர்களுக்குள் 143 என்று புரிந்து கொண்டேன். ஆனால், நான் மேற்கொண்டு எதுவும் பேசாமல் நாகரிகமாக அத்துடன் விட்டுவிட்டேன்'' என்கிறார்.

''ஒருமுறை சூர்யாவுடன் பேசிக் கொண்டிருந்தபோது, 'எவ்வளவு நாளானாலும் காத்துக் கொண்டிருந்து, பெற்றவர்கள் சம்மதத்துடன் கல்யாணம் பண்ணிக்கொள்வதுதான் எல்லாவிதத்திலும் நல்லது' என்று நான்



சொன்னபோது, சூர்யாவும் 'எனக்கும் அதே எண்ணம் தான் என்று கூறினார்' என்கிறார் வஸந்த்.

**க**ல்கி கவர் ஸ்டோரிக்காக அண்மையில் சூர்யாவை சந்தித்தபோது, நம்மிடம் மனம் திறந்து பேசினார். அதில் பெரும்பகுதி அவரது திருமணத்தைப் பற்றியதாகவே இருந்தது. ''பெற்றோருடைய சம்மதத்துடன்தான் எங்கள் திருமணம் நடைபெற வேண்டும் என்று இருவரும் விரும்பியதால், அதற்கு எவ்வளவு காலமானாலும் காத்திருக்க முடிவு செய்தோம். எங்களது ஆழமான காதலைப் புரிந்து கொண்ட பெற்றோரும் சம்மதம் சொன்னார்கள். திருமண தேதி முதலிய விவரங்களை அப்பா வாயால் முறைப்படி சொல்வதுதான் சரி. அவரே விரைவில் சொல்வார்'' என்று வெளிப்படையாகப் பேசினார் சூர்யா. அதன் படியே, சிவகுமார் திருமண அறிவிப்பை ஒரு கடிதமாகவே பத்திரிகையாளர்களுக்கு அனுப்பி வைத்து விட்டார்.

''ஒரு நல்ல பெண், ரொம்ப நல்ல பையன் ஒருவரைக் கல்யாணம் செய்து கொண்டு, ஓர் அற்புதமான மாமனார், மாமியார் வீட்டுக்குப் போகப் போகிறார் என்கிறபோது, அவர்கள் இரண்டு பேருடைய தமிழ்த் திரைப்பட அறிமுகத்துக்குக் காரணமானவன் என்ற முறையில் நான் பெருமைப்படுகிறேன்'' என்கிறார் இயக்குனர் வஸந்த்.

**- எஸ்.சந்திரமௌலி**

## நிகழ்வு

அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அக்கட்சியின் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் கருப்பு வாத்தியாராகி இருக்கிறார். 'சட்டமன்றத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?' என்பது குறித்து வகுப்பெடுக்கிறார்.

"வகுப்பெடுக்கிறேன்னு சொல்லாதீங்க. வழிகாட்டுறேங்கறதுதான் சரியானது. இதுக்கு என்ன அவசியம்னா, இப்போது தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள எங்கள் சட்டமன்ற உறுப்பினர்களில் பாதிக்கும் மேற்பட்டோர் புதியவர்கள். பலமான எதிர்கட்சியைச் சேர்ந்தவர்கள். ஒரு சட்டமன்ற உறுப்பினருக்கு சட்டமன்றத்தின் பழைய வரலாறு அவசியம் தெரிந்திருக்க வேண்டும். அப்போதுதான் ஆளுங்கட்சியின் செயல்பாடுகளை விவாதிக்க முடியும். இதுபோல் பல விஷயங்களுக்காகத்தான் இந்த வழிகாட்டுதல் பயிற்சி" என்கிறார்.

அரசியல் சட்டம் 194-ன்படி சட்டமன்ற உறுப்பினர்களுக்கு நீதிமன்றச் செயல்பாடுகள் உட்பட எல்லாவிதப் பிரச்னைகளைப் பற்றியும் பேச உரிமை இருக்கிறது. ஆளும்கட்சியின் செயல்பாடுகள் விதிமுறை மீறலாக இருந்தால், ஒழுங்குப் பிரச்னை (point of order) எழுப்பலாம். முக்கியமான பொதுப் பிரச்னைகளைப் பற்றி விவாதிக்க ஒத்திவைப்புத் தீர்மானம் மற்றும் கவன ஈர்ப்புத் தீர்மானம் நடத்தலாம். பட்ஜெட் போன்ற பொது விவாதங்களில் கலந்துகொண்டு பேசலாம். ஆளும் அமைச்சர்கள் மான்ய கோரிக்கை வைக்கும்போது, வெட்டுத் தீர்மானங்களைக் கொண்டு வர முடியும். மேலும் குறுகிய கால வினாக்கள், உரிமைப் பிரச்னை போன்ற சமயங்களில் எப்படிக் கேள்வி கேட்க வேண்டும் என்பது போன்ற பல விஷயங்களைச் சொல்லித் தருகிறேன்" என்று அடுக்கிக்கொண்டே போகிறார்.

சபாநாயகரை நீக்கக் கோரும் இவர்களின் தீர்மானம் முறியடிக்கப்பட்டு விட்டதைப் பற்றியும் பேசுகிறார் கருப்பு.

"சபை விதிகளுக்கு முரணாகப் பல விவகாரங்களில் சபாநாயகரின் நடவடிக்கை இருக்கிறது. உதாரணமாக, முதல் கூட்டத் தொடரில் எங்கள் உறுப்பினர்கள் அனைவரையும் இடை நீக்கம் செய்தார்கள். இது விதி எண் 121-ன்படி செய்யப்பட்டதாகச் சொன்னார். அந்த விதியின்படி தனி உறுப்பினரைத்தான் நீக்க முடியுமே தவிர, குழுவாக நீக்க முடியாது. நாங்கள் அவரை நீக்கும் தீர்மானத்தைக் கொடுத்தபோது அதை உடனே எடுத்துக்கொண்டு வழிமொழிய ஆளில்லை என்று கூறினார்கள். இதுவும் தவறு. பதினான்கு நாட்கள் கழித்துத்தான் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டும்" என்கிறார்.

கடந்த அ.தி.மு.க. ஆட்சியிலும் விதிமுறை மீறல்கள் நடந்ததாக தி.மு.க.



# சுப்பு வாத்தியார்!

குற்றம் சாட்டுவதைப் பற்றிக் கேட்டால்... "சில தவறுகள் நடந்திருக்கலாம். அதற்காக அதே தவறை தி.மு.க. செய்யலாமா? தவறுகள் மரபுகளாகாது" என்கிறார்.

இவரது அரசியல் வாழ்க்கை துவங்கியது பொதுவுடைமை இயக்கத்தில். அங்கே பொதுப் பிரச்னைகள் குறித்து விவாதங்கள் நடத்தப்படும். அந்த அனுபவமும், சட்டமன்ற நூலகத்தை முழுமையாகப் பயன்படுத்திய அனுபவமும் இந்த வழிகாட்டுதலுக்கு உதவியாக இருக்கின்றனவாம்!

- ப்ரியன்

படம்: ராஜன்




# நேற்றைய காற்று!

**யுகபாரதி**

**கா**ற்றுக்குக் காலமில்லை. நேற்று, இன்று, நாளை எனும் பகுப்பும் பேதமும் அதற்குப் பொருந்தவே பொருந்தாது.

நேற்று அடித்த காற்றின் வலி நாளைய காயத்துக்கு மருந்தாகவும் மாறிப் போவதால் காற்று என்றென்றும் நமக்குள் மயக்கத்தைத் தோற்றுவிக்கும் மர்மமுடையது.

நினைவுகளைச் சுமந்த தேகம் போல பாடல்களைச் சுமக்கும் காற்றைவிட்டால் நேற்றை நினைத்துப் பார்க்க நமக்கு வாய்ப்பில்லை. குறிப்பாக, திரைப்பாடல்கள்.

*'ஒரு ராத்திரிக்கு*
*பன்னிரண்டு*
*மணியா?*
*அது காதலுக்கும்*
*போதுமென்றால்*
*சரியா?'*

- வெகுவாக நான் ரசித்த ஒரு திரைப் பாடலின் இடைவரி இது. இம்சை அரசன் 23ம் புலிகேசி திரைப்படத்தில் இடம் பெற்றுள்ள 'பஞ்சு மெத்தை கனியே' எனும் பல்லவிதாங்கி வந்துள்ள பாடல். எழுதியவர் புலவர் புலமைப்பித்தன்.

எழுத்து லட்சணங்கள் பொருந்திய படைப்பாளிகள் எல்லா மொழிகளிலும் போல தமிழிலும் குறைவு. அதிலும் திரைப்பாடலாசிரியர்களில் எனக் கணக்கெடுத்தால் ஒரு சிலரே தேறுவார்கள்.

அவசர கதியில் இயற்றப்படுவதாலும் மொழி உணர்வு மிக்கவர்கள் அதைத் தீர்மானிக்கும் இடத்தில் இல்லாததாலும் இக்குறை நிகழ்வதாகக் கொண்டாலும் அதிலும் அளப்பரிய ஆக்கங்களைச் சிலரேனும் செய்திருக்கிறார்கள். அந்தச் சிலரில் புலவருக்கும் இடமுண்டு.



ஐ.ஏ.எஸ். படித்துவிட்டு ப்யூன் வேலை செய்வதாக அவரே குறைப்பட்டுக் கொண்டாலும் அவரின் தமிழுக்குப் பல்கலைக்கழக அந்தஸ்துண்டு என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள்.

சில வருடங்களுக்கு முன்பாக, என் பள்ளிப்பருவ நாட்களில் திரைப்பாடல் மீது அதீத ஆர்வங்கொண்டு அதிலேயே கரைந்த பொழுதுகளில் 'நாயகன்' திரைப்படம் வெளிவந்தது.

அந்தத் திரைப்படத்திலுள்ள அத்தனை பாடல்களும் அத்தனை பேரையும் கவர்ந்தன. இசையும் வரிகளும் இயைந்த அழகோடு சூழலுக்குச் சற்றும் பிறழாதவாறு அமைந்திருக்கும்.

*'நீயொரு காதல் சங்கீதம்*
*வாய்மொழி சொன்னால் தெய்வீகம்.'*

விபச்சார விடுதியிலிருந்து நாயகனால் அழைத்துச் செல்லப்படும் நாயகிக்காக எழுதப்பட்ட வரிகள் அவை. காதலின் உச்சபட்ச சாத்திய மொழியாக எழுதப்பட்டது. தெய்வீகம் என்ற சொல், சொல்லாக அல்லாமல் சூட்சுமம் நிரம்பிய ஒன்றின் வெளிப்பாடாக இருக்கிறது. ஆன்மிகத்தில் ஈடுபாடுடைய யாருமே தெய்வீக தரிசனத்தின் தேடலை உணருவர். ஆனால், புலவரோ நாத்திகவாதி. ஆனபோதும், அவரால் அவ்விதம் எழுத முடிந்ததற்குத் தமிழே



• காதலுக்குப் போதுமா...?

காரணம்.

'மணல் வெளியாவும் இருவரின் பாதம்
நடந்ததைக் காற்றே மறைக்காதே'

நவீன கவிதைகளிலும்கூட இத்தகு கம்பீரம் கிடைக்குமா? தெரியவில்லை. ஆனால், இசைக்கேற்ப எழுதப்பட்ட அந்த வரிகள், அகநானூற்றுச் சாறை அகப்பையில் அள்ளியது போல இருக்கிறது.

'பூவைச் சூட்டும் கூந்தலில் எந்தன்
ஆவியை நீ ஏன் சூட்டுகிறாய்
தேனை ஊற்றும் நிலவினில் கூட
தீயினை நீ ஏன் ஊற்றுகிறாய்'

பூவுக்குப் பதிலாக என் ஆவியைச் சூட்டுகிறாயே கூந்தலில் எனக் கேட்கும் உவமை வெறுமே திரைப்பாடல் சந்த நயத்துக்கு எழுதப்பட்டதாகத் தோன்றவில்லை. அந்த வரிகளுக்குப் பின்னே ஓர் இலக்கியச் சார்பு பொதிந்துள்ளது.

முருகிற் சிவந்த கழுநீரும்
முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழல் மடவீர்!
செம்பொற் கபாடம் திறமினோ!

கலிங்கத்துப்பரணி - கடை திறப்புப் பகுதியில் வரும் இவ்வுவமையே மிக எளிய சொற்களில் சொல்லப்பட்டுள்ளது.

திரைப்பாடலுக்கு இலக்கிய அந்தஸ்து உண்டா, இல்லையா என விவாதிக்கத் தேவையில்லை. திரைப்பாடலும் இலக்கிய நயத்தை ஏற்படுத்தும் வகைகளைக் கைகொள்ளுகின்றன.

இதனால் ரசிகனுக்கு என்ன பயன் எனக் கேட்கலாம். இலக்கியத்திலுள்ள சிறந்த பகுதிகளை ஒரு சராசரிக்கும் கொண்டு சேர்க்க திரைப்பாடலால் மட்டுமே இன்றைய நாட்களில் இயலும். பயன் ரசிகனுக்கு நேராமல் போனால்கூட இலக்கியத்தின் தொடர்ச்சியை வெகுஜன ரசனைக்கு மாற்ற முடியுமே.

'பதவிக்கு ஆசை
வந்தால்
கொலைகூட தர்மம்தானே
வரலாற்றின் பக்கம் எல்லாம்
வழிகின்ற ரத்தம் சாட்சி
பாசங்கள் - பந்தம்
எல்லாம்
மனிதர்க்குத்
தானடா
பதவிக்கு
வாழ்க்கைப்பட்டால்
அவையெல்லாம்
ஏதடா?'



• புலமைப் பித்தன்

'நீதிக்குத் தண்டனை' திரைப்படத்தில் 'ஓ... மனிதர்களே' என்ற பாடலில் வந்த செய்தி இது. பதவி மோகத்தால் சொந்தச் சோதரர்களை வீழ்த்தும் நிலைக்குப் போன பல புராணக் கதைகள் நம்மிடம் உண்டு. நிகழ் அரசியல் காட்சியிலும். ஒரு கோரத்தை, கொப்பளிக்கும் மனிதத் துயரை வரலாற்றின் பக்கம் எல்லாம் வழிகின்ற ரத்தம் சாட்சி என வரைந்து காட்டுகிறார்.

இன்றைய தமிழ் இலக்கிய உலகில் அரசியலுக்கு இடமே இல்லை. அதாவது அரசியல் விஷயங்களுக்கு. குழு அரசியலில் ஒருவருக்கு ஒருவர் குடுமி பிடிக்கிறார்களே அன்றி மக்கள்

# திரையிசைத் தெம்மாங்கு தொடர்

அரசியலில் கவனம் செலுத்த ஆளில்லை. அதிகபட்சமாக சுனாமி, தீ விபத்து போன்ற அசம்பாவிதங்களுக்குக் கவிதை புனைவதோடு நிறுத்திக் கொள்கிறார்கள் (கிறோம்).

திரைப்படங்களும் ரவுடிகளைக் கதை மாந்தர்களாகக் கொள்ளும் துர்பாக்கிய நிலையில் இருப்பதால் புரட்சிகர சிந்தனைகளுக்கோ, போராட்ட முழக்கங்களுக்கோ வழியற்றுப் போகின்றன.

'பா வேந்தரின் கவிதையிலுள்ள வேகத்தையும் உணர்ச்சியையும் புலவர் புலமைப்பித்தனிடம் காண்கிறேன்' எனப் பேரறிஞர் அண்ணா ஒருமுறை கூறியதாகத் தகவல். அத்தகவலை மெய்ப்பிக்கும் விதமாகப் பல பாடல்களைத் யாத்துள்ளார். 'கள்ளுக்கடை காசிலே தாண்டா, கட்சிக் கொடி ஏறுது போடா' போன்ற நறுக்கு வரிகள் தெறிக்கும் இவரிடம் நான் வசமிழந்த பாடல் 'நினைத்ததை முடிப்பவன்' படத்திலுள்ள

'பூமழை தூவி
வசந்தங்கள் வாழ்த்த
ஊர்வலம் நடக்கின்றது' - எனும்

பாடல். மேலோட்டமாகப் பார்த்தால் அண்ணன், தங்கைக்குப் பாடிய பாடல் போலத் தோன்றினாலும் அறிஞர் அண்ணாவுக்குப் புலவர் எழுதியது போல இருக்கும்.


• நீயொரு காதல்...

புகார் நகரிலிருந்து மறுபடியும் மதுரைக்குத் திரும்பிய கண்ணகியைப் பார்த்து, கோட்டை மதிற் சுவர்க்கொடி வராதே என அசைந்தது போல தற்குறிப்பேற்றிப் பாச்சுவையைக் கூட்டிய இளங்கோவை நினைவூட்டும் முகமாக 'பூ மழை தூவி'யிலும் ஓர் இடம்.

தங்கையின் கழுத்திலாடும் சங்கிலி என்ன பொருள் சொல்கிறதென்றால் அண்ணாவை மறவாதே எனும் பொருள் பட அசைகிறது என்கிறார்.

'வெண்சங்குக் கழுத்தோடு
பொன்மாலை அசைந்தாட
நான் கண்ட
பொருள் கூறவா? - என்
அண்ணாவை ஒருநாளும்
என்னுள்ளம் மறவாது
என்றாடும்
விதமல்லவா?'

புலமைப்பித்தனின் ஏனைய பாடல்களிலும்கூட இப்படியான அசாத்திய வர்ணனைகளை வியக்கலாம். சமூகப் பொறுப்புக்குச் சமூகம் செலுத்தும் மரியாதை இருக்கிறதே, அது கிடைக்கும் புகழ், பொருளைவிடப் பெரிது.

பாபநாசம் சிவன் தொடங்கி இன்றுவரையுள்ள பல பாடலாசிரியர்களின் உழைப்பையும் நேர்த்தியான சுவைப் பதிவுகளாக்குவதே நேற்றைய காற்றின் அடிப்படை. இது முழுக்க முழுக்கத் தனியொருவனின் சொல்முறைக்காக வகைப்படுத்தப் படுவதால் முன்னும் பின்னுமாக நகர்தல் தவிர்க்க முடியாதது.

பாடலாசிரியர்கள் நினைத்ததைச் செய்தது அல்லது நினைக்காமல் நெய்தது பலவற்றையும் ரசனையால் தொகுக்க இருக்கிறேன். நம்முடைய பழைய ஞாபகங்களைத் தூசி தட்டவும், பரண்களில் முடங்கிய சம்பவ அலமாரியை மீண்டும் எடுத்து அழகுற காட்சிக்கு வைக்கவும் இது உதவக்கூடும்.

(வீசும்)

## சூப்பர் மார்க்கெட்!

# ராங் கால் ஃபோனு

எழுதினால் சர்ச்சையோ டெழுதுக அஃதலாது
எழுதலின் எழுதாமை நன்று.

- இந்தக் குறள்தான் புதுப் புத்தகங்களுக்கு ஸ்டாண்டர்டா இருக்கு.

ஜஸ்வந்த்சிங் புக்கை 'எ கால் டு டிஸ்ஹானர்'னு ஏன் பெயர் மாத்தக்கூடாதுன்னு காங்கிரஸ்காரங்க கேக்கறாங்க.

* சிவசங்கரி

பாலிடிக்ஸை விட்டுட்டு ஸ்போர்ட்ஸ் பக்கம் வந்தா, இந்திய டீமோட முன்னாள் கோச் ஜான் ரைட்டோட (நியூசிலாந்துக்காரர்) இன்டியன் சம்மர்ஸ் சர்ச்சை! இதுல இன்டியன் பிளேயர்ஸுக்கிடையில இருந்த மனஸ்தாபம், 'டிராவிட்டோட நல்ல கேப்டன்ஸி', 'கங்குலியோட அதிகப்பிரசங்கம்', இந்திய கிரிக்கெட் போர்டைப் பற்றின அவரோட ஃபிராங்க் ஒபினியன் - இப்படி எக்கச்சக்கமான கூக்லியும் சைனாமேனும் போடறார் நூலாசிரியர்.

கிரிக்கெட் போர்ட் விடுமா...? "மிஸ்டர் ரைட், யு ஆர் ராங். வெரி ராங்!"னு மறுப்பு விட்டிருக்கார் போர்ட் செயலாளர் நிரஞ்சன் ஷா. "இந்தியாவைப் பற்றி உமக்கென்ன தெரியும்? இத்துனூண்டு நாடு நியூசிலாந்து; அங்கே கால் கிலோ கிரிக்கெட் பிளேயர்ஸ்தான் இருக்காங்க. அதை வைச்சுக்கிட்டு என்னமோ பேச வந்துட்டீங்க!" அப்படின்னு ஷா சாடித் தள்ளியிருக்காரு.

> "அன்புமணி, ராமதாஸுக்கு 'பாம் வொண்டர்ஃபுல்' பத்தி தெரியுமா?"




தமிழ்நாட்டுல சிறு பத்திரிகைன்னாலே சர்ச்சைதான். அந்த கேங்க்ல ஒரு புது புராடக்ட் சேர்ந்திருக்கு ஆகஸ்ட் 15லேருந்து - பேரு அம்ருதா. பப்ளிஷர் பிரபுதிலக். திலகவதி ஐ.பி.எஸ்.ஸோட மகன். ஜே.கே. கையால முதல் இதழ் வெளியாயிருக்கு. அம்ருதாவோட பெயரே டிஃபரண்டா இருக்கிற மாதிரி, அப்ரோச்சும் டிஃபரண்டா இருக்குமான்னு

பார்க்கணும்.

இன்னொரு எழுத்தாளரும் இப்ப நியூஸ்ல இருக்காங்க - இலக்கியம் மூலம் இந்தியாவை இணைக்கப் பாடுபடும் சிவசங்கரி. இவங்களுக்கு ஒரு அவார்ட்... நோ! நோ! தமிழ்நாட்டுல யாரும் தரலை. மும்பைல வைச்சு டெல்லி முதல்வர் கையால விருதை வழங்க வைச்சிருக்காங்க ஜீ. டி.வி.க்காரங்க. அர்ச்சனா டிரஸ்ட்டோட இணைஞ்சு இதை ஜீ. டி.வி. செய்யுதாம்! ஆண்டுதோறும் கலை, நாடகம், இன்டஸ்ட்ரி, ஜர்னலிஸம், சோஷல் சர்வீஸ்னு பல்வேறு துறைகள்ல முன்னுதாரணமா இருக்கிற பெண்களுக்குத்தான் இந்த விருது. 'ஜீ அஸ்திவ் விருது' தேர்வுக் குழுவுல



• ஜான் ரைட்

# ரைட்!

பிர்லா, கோயங்கா, அம்பானி, ஜிந்தால், கோத்ரெஜ் இல்லத்து அரசிகள் இருக்காங்க.

நம்ம தமிழ்நாட்டு டி.விக்கள் ஏன் இப்படி ஒரு நல்ல காரியம் செய்யக்கூடாது? (தேர்வுக் குழுவுக்கு என்னைக் கூப்பிடுவாங்கன்றதுக்காகச் சொல்லலைப்பா...)

லாஸ் ஏஞ்சலஸ்ஸைச் சேர்ந்த ஸ்டுவர்ட் லிண்டா தம்பதி கலிஃபோர்னியால ஒரு தோப்பு வாங்கியிருக்காங்க - அது முழுசும் மாதுளை மரங்கள். எல்லாத்தையும் வெட்டிட்டு வேற பயிரிடற யோசனையை ஒதுக்கிட்டு, மாதுளை ஜூஸ் மானுஃபாக்சரிங் தொழிலகம் ஆரம்பிச்சிருக்காங்க. 'பாம் வொன்டர் ஃபுல்' அப்படின்ற பிரான்ட் நேம் குடுத்து, புட்டியில அடைச்சு பிரமாதமா மார்க்கெட் பண்ணி 2002-ல ஆரம்பிச்ச விற்பனை, 2003-ல 12 மில்லியன் டாலரைத் தொட்டு இப்போ 91 மில்லியன் டாலருக்கு எகிறியிருக்கு!

நாம என்னடான்னா அமெரிக்கா திணிக்கிற பெப்ஸி - கோக்ல பூச்சி மருந்து சதவிகிதத்தைக் கணக்கு போட்டு மாய்ஞ்சுக்கிட்டிருக்கோம்



• லிண்டா

மாதுளை இங்கேயும்தான் விளையுதுன்றதை மறந்து!

கோலாவைக் கடாசிட்டு ஃப்ரூட் ஜூஸுக்கு மாறுங்கன்னு ரீசன்டா குரல் கொடுத்திருக்கற பா.ம.க. லீடர் ராமதாஸ், அவரோட மகன் ஹெல்த் (கான்ஷெஸ்) மினிஸ்டர் அன்புமணி ரெண்டு பேருக்கும் 'பாம் வொண்டர் ஃபுல்' பத்தி தெரியுமா? ●





# கல்கி



2006 ஆகஸ்ட் 20
விய ஆவணி 4
மலர் : 65
இதழ் : 3

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## நட்வர் சிங்கின் நாடகம்!

நட்வர் சிங் நாடகங்களை நிறுத்திவிட்டு அரசின் சட்ட பூர்வமான நடவடிக்கைகளுக்குக் காத்திருந்து, நீதித் துறையின் முடிவை ஏற்பதே நல்லது.

பாதக் கமிஷனின் அறிக்கை, முன்னாள் அயலுறவுத் துறை அமைச்சர்மீது தெளிவாகக் குற்றம்சாட்டுகிறது. உணவுக்கு எண்ணெய் பரிவர்த்தனை திட்டத்தில் தமது செல்வாக்கைப் பயன்படுத்தி 1,46,000 டாலர் ஆதாயம் கண்டிருக்கிறார் நட்வர் சிங். அவர் பெயரிலோ, அவர் மகன் பெயரிலோ உள்ள வங்கிக் கணக்குகளுக்கு இத்தொகை வந்து சேரவில்லை என்றாலும், தொகையைப் பெற்ற அந்தலீப் சேகல், ஆதித்யா கன்னா ஆகிய இருவரும் நட்வர் சிங்குக்கு நெருக்கமானவர்கள்.

அந்தலீப் சேகல், தமது மகன் கேத் சிங் ஆகியோருடன் இணைந்து நட்வர் சிங் இராக்கிய எண்ணெய் வளத்துறை அமைச்சரைச் சந்தித்திருக்கிறார்; தமது செல்வாக்கைப் பயன் படுத்தியிருக்கிறார்; பல முறை இராக்கிய அமைச்சருக்குக் கடிதமும் எழுதியிருக்கிறார்; காங்கிரஸ் கட்சியின் பெயரைப் பயன்படுத்தி வற்புறுத்தியுமிருக்கிறார். இதையெல்லாம் பாதக் கமிஷன் அறிக்கை ஆதாரங்களுடன் எடுத்துக் கூறியிருக்கிறது.

ஆனால், நட்வர் சிங்கோ தாம் பணமே பெறாததால் குற்ற மற்றவர் என்பதுபோல் வாதிடுகிறார். மேலும், காங்கிரஸ் கட்சிதான் ஊழலில் ஈடுபட்டதாகவும், கட்சியைக் காப்பாற்ற தாம் பலிகடா ஆக்கப்பட்டதாகவும் வாதிடுகிறார்.

அவர் சொல்கிறபடியே காங்கிரஸ் அவரை ஊழலில் ஈடுபட வற்புறுத்தியிருந்தால், அதற்கு மறுத்து அவர் உறுதி காட்டியிருக்க வேண்டும் என்பதை மறந்து பேசுகிறார் நட்வர் சிங்!

மேலும், அவருடைய நண்பர்களின் சுவிஸ் வங்கிக் கணக்கு




வரை எட்டிய ஊழல் பணம், அதன் பிறகு மாயமாய் மறைந்து போனது எப்படி என்பதற்கான விளக்கமும் அவரிடம் இல்லை.

தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்காக இப்போது எதிர்கட்சிகளுடன் சேர்ந்து கொண்டு தற்போதைய அரசின் அயலுறவுக் கொள்கையைக் கடுமையாக விமர்சிக்கவும் முற்படுகிறார் நட்வர் சிங். கூடவே, பாதக் கமிஷன் அறிக்கை முடிவுகள் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும் முன் கசியவிடப்பட்டதைப் பெரிதுபடுத்துகிறார். அதற்காக பிரதமர் மீது உரிமைமீறல் பிரச்னையை அவையில் எழுப்பியுள்ளார்.

பிரச்னையிலிருந்து கவனத்தைத் திசைதிருப்பும் நட்வர் சிங்கின் சிறுபிள்ளைத்தனம் மிகவும் கேலிக்குரியதாக இருக்கிறது.

அறிக்கை நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படுமுன் கசியவிடப்பட்டது தவறுதான். அத்தவறு குறித்து விசாரிக்கவும் நாடாளுமன்ற விவகார அமைச்சர் ஆணை பிறப்பித்துவிட்டார். ஆனால், இவை எதுவுமே நட்வர் சிங் பேரில் படிந்துள்ள கறையைக் கழுவ முடியாது!

எதிர்கட்சிகளும் மையப் பிரச்னையை விட்டுவிட்டு, காங்கிரசுக்கு அவப்பெயரை ஏற்படுத்த வேண்டும் என்பதிலேயே குறியாக இருக்கின்றன. நட்வர் சிங்குக்கு எதிர்கட்சிகள் ஆதரவு அளிப்பதான தோற்றத்தையே இது உருவாக்கும்.

காங்கிரஸ் பரிசுத்தமான கட்சி அல்ல என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால் அதனாலேயே நட்வர் சிங்கின் செயல் நியாயமாகிவிட முடியாது.

பட்டவர்த்தனமான ஆதாரங்களுடன் ஒரு கமிஷன் அறிக்கை சமர்ப்பிக்கப்படுகிறபோது, குறைந்தபட்சம் அதைக் குறை கூறாமலாவது இருக்க வேண்டும். நட்வர் சிங்கோ நீதிபதி பாதக்கின் நேர்மையையே சந்தேகத்துக்குட்படுத்துகிறார்.

இத்தகைய போக்கு ரசனைக் குறைவானது என்பதுடன், குற்றம் சாட்டப்பெற்றவர் தப்பிக்க முயன்று தவிப்பதையே உணர்த்துகிறது.

உண்மையில், அண்மைக் காலங்களில் நிறுவப்பட்ட கமிஷன்களுள் பாதக் கமிஷன் விரைந்தும் விவேகத்துடனும் செயலாற்றி, பிரச்னைக்கு முடிவு காண வழிவகுத்திருப்பதுடன், நேர்மையற்ற அரசியல்வாதிகளுக்கு ஓர் எச்சரிக்கையாகவும் விளங்குகிறது.

ஒரு கமிஷன் எவ்வாறு செயலாற்ற வேண்டும் என்பதற்கு பாதக் கமிஷன் நல்ல உதாரணம். கமிஷன் விசாரணைக்கு உள்ளாகும் நபர் எப்படியெல்லாம் நடந்துகொள்ளக் கூடாது என்பதற்கு நட்வர் சிங் மிக நல்ல உதாரணம். ●

**சம்திங் டிஃபரெண்டாய் இருக்கிறார் ஜெயம் ரவி. எல்லாம் 'உனக்கும் எனக்கும்' வெற்றி கொடுத்த குஷி. ''இப்படியொரு மாஸ் ரீச் கிடைக்கும்னு எல்லாரும் எதிர்பார்த்தோம். அது நிறைவேறினதுல ரொம்ப சந்தோஷம்'' என்று அடக்கமாகப் பேசுகிறார். அடுத்து அவரது கவனம் முழுக்க எழிலின் 'தீபாவளி'யில் இருக்கிறது. இதிலும் சக்சஸ் கிடைக்குமா?**

''நிச்சயமா சார். ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி எழில் சார் இந்தக் கதையை எங்கிட்ட சொன்னப்பவே பச்சக்னு மனசுல பதிஞ்சுடுச்சு. அடுத்தடுத்து படங்கள் இருந்ததால உடனே பண்ண முடியல. இப்பத்தான் நேரம் கிடைச்சது, இறங்கிட்டோம். எழில் சார், 'துள்ளாத மனமும் துள்ளும்' படம் மூலமா விஜய் சாருக்கு மிகப்பெரிய திருப்புமுனையைக் கொடுத்தாரு. 'தீபாவளி' மூலமா எனக்கும் அது நிகழும்னு நம்பறேன்.''

**'தாஸ்', 'இதயத்திருடன்' என்று உங்கள் குடும்பக் கூட்டணி இல்லாமல் நீங்கள் செய்த படங்கள் எதிர்பார்த்த வெற்றியைப் பெறவில்லையே...?**

''அப்படிச் சொல்ல முடியாது. வசூல்ரீதியா இல்லைன்னாலும் அந்தப் படங்கள் எனக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுத்திருக்கு. அதே நேரத்துல அண்ணன், அப்பான்னு களமிறங்கும்போது அதுக்குத் தனி ரெஸ்பான்ஸ் கிடைக்கறதையும் மறுக்க முடியாது. கூடிய வரைக்கும் இனி வெளிப்படங்கள் பண்ணணும்னு முடிவு பண்ணியிருக்கேன்!''

**உங்கள் நடிப்புக் கூட்டாளிகளான சிம்பு, தனுஷ் எல்லாம் கெட்டப் மாற்றி பின்னியெடுக்கும்போது நீங்கள் மட்டும் தொடர்ந்து ப்ளேபாயாகவே நடிக்கிறீர்களே...?**

''ஒவ்வொருத்தருக்கும் ஒரு ரூட் இருக்கு சார். நம்ம வழி தனி வழி; கமர்ஷியல் வழி. இன்னும் எவ்ளோ நாளைக்கு இது மாதிரி நடிக்க முடியும்...? இன்னொன்னு, என்னைத் தேடி வர்ற கேரக்டர் எல்லாமே இது மாதிரிதான் வருது. புதுசா பண்ணணும்னு எனக்கு மட்டும் ஆசை இருக்காதா என்ன? நேரம், காலம் எல்லாம் ஒத்து வரும்போது பின்னியெடுக்கப் போறேன் பாருங்க!''

**சக நடிகர்களுக்குள் ஒற்றுமையே இருப்பதில்லையே...?**

''யார் சொன்னது? நேரம் கிடைக்கும்போதெல்லாம் போன்ல பேசிக்கிறோம். ஃபங்ஷன், நாளு கிழமைல சந்திச்சு மகிழறோம். எங்களுக்குள்ள எந்த ஈகோவும் இல்ல. நீங்கதான் எதையாவது கௌப்பி விடறீங்க. 'சம்திங்' பார்த்துட்டு சிம்பு போன்ல பாராட்டினாரு. இன்னும் சிலரும் பேசினாங்க. எங்களோட நட்பு கண்ணாடி மாதிரி. சின்ன கீறல் பட்டாலும் கஷ்டம். அதனால கவனமாவே இருப்போம்.''

**தொடர்ந்து வன்முறை, ஆபாசம் சார்ந்த சினிமாதான் இன்றைக்குத் தமிழ் சினிமாவை ஆக்ரமித்து வருகிறது. சமுதாய வீழ்ச்சிக்கு இது வழிவகுத்துவிடாதா?**

# நட்பு...



''அப்படிச் சொல்ல முடியாது. தமிழ் மக்கள் எதை ஆராதிக்கணும், எதை அப்புறப்படுத்தணும்னு தெரிஞ்சவங்க; புரிஞ்சவங்க. தப்பான எந்த விஷயத்தையும் அவங்களுக்

குள்ள அனுமதிக்க மாட்டாங்க. தொடர்ந்து ஒரே மாதிரி படங்கள் வர்றது ஒரு ட்ரெண்ட், அவ்வளவுதான். காலப்போக்குல இது மாறும்.''

**தெலுங்கு ரீமேக் படங்களையே தொடர்ந்து செய்வது அலுப்பாக இல்லையா?**

''என்ன சார், இப்படிச் சொல்லிட்டீங்க! இதுதான் இன்னைக்கு சக்சஸ் ஃபார்முலா. நம்ம படங்கள் அங்கேயும், அவங்க படங்கள் இங்கேயும் சக்கைப்போடு போடுது. எனக்கு ரெண்டு மொழி சினிமாவும் பிடிக்கும். அலுப்பு வர்றதுக்கு வாய்ப்பே இல்ல. அதே நேரத்துல நேரடி தமிழ்ப் படங்களும் பண்ண ரொம்ப ஆர்வமாத்தான் இருக்கேன். தீபாவளி அதுக்கு ஒரு நல்ல தொடக்கமா இருக்கும்.''

**இன்னும் எத்தனை நாளுக்கு அப்பா, அண்ணன் பிள்ளையாவே இருக்கப் போறீங்க?**

''அதிலென்ன தப்பிருக்கு? எனக்கு வழி காட்டினவங்க அவங்க! எங்க மூணு பேருக்குமே கதை ஒத்துவந்தா உடனே நடிக்கப் போயிடுவேன். என் வளர்ச்சியில் அண்ணனுக்கும் அப்பாவுக்கும் பெரிய பங்குண்டு. அவங்க இல்லன்னா நான் இல்ல!''

**அஸின், சதா, த்ரிஷா, பாவனா என்று முன்னணி ஹீரோயின்கள் எல்லோரோடும் நடித்து விட்டீர்கள்... யார், எதில் பெஸ்ட்?**

''நான் இந்த ஆட்டத்துக்கு வரலைன்னாலும் நீங்க விடமாட்டீங்க... அஸின் காமெடிலயும், சதா அமைதிலயும், த்ரிஷா க்ளாமர்லயும், பாவனா பழகுறதுலயும் பெஸ்ட். ஒட்டு மொத்தமா இவங்க எல்லாருமே எனக்கு நல்ல ஃப்ரெண்ட்ஸ்''

**அதெல்லாம் சரி... உங்களுக்கும் 'அவங்களுக்கும்' காதலாமே...?**

''ஐயா... சாமி... பேட்டி போதும், எழுந்திருங்க... நீங்க எதையும் கௌப்பிவிடாம இருந்தாலே போதும். நான் பொழைப்பை ஓட்டிக்குவேன்!''

# காதல்... நான்!



**- மனோன்மனோ,**

அட்டை, படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**



# கலைஞர் அலுவலகத்தில் கட்டப்பஞ்சாயத்து!

● கலைஞரின் சேப்பாக்கம் சட்டமன்ற அலுவலகத்தில் அன்றாடம் கட்டப் பஞ்சாயத்து மட்டுமே நடப்பதாக சொல்கிறார்கள் லோக்கல் அ.தி.மு.கவினர். பாரிமுனையில் ஒரு பழக்கடைக்காரரை (இவரும் சேப்பாக்கம் உடன்பிறப்புதான்) காலி செய்ய சமீபத்தில் நடந்த பஞ்சாயத்தில் விவகாரம் உஷ்ணமாகி, உயர் மட்டத்துக்குச் சென்று விட்டதாம்!

● கடந்த சில நாட்களுக்கு முன்பு ப.சிதம்பரம், ஜெயந்தி, ஈ.வி.கே.எஸ். இளங்கோவன், தங்கபாலு, கிருஷ்ணசாமி ஆகியோர் குழுவாகச் சென்று சோனியாவை சந்தித்தார்கள். அவர்கள் சந்தித்த பிறகு இரண்டாம் கட்டப் பிரமுகர்களான செல்வம், விஜயன், சிரஞ்சீவி ஆகியோர் சந்தித்தார்கள். மேலிடத்துக்கு இவர்கள் எல்லோரும் ஒற்றுமையோடு வைத்த கோரிக்கை: உடனே தமிழ்நாடு பொறுப்பாளராக இருக்கும் வீரப்ப மொய்லியை மாற்றுங்கள்; தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமியைச் சுதந்திரமாகச் செயல்பட அனுமதியுங்கள்.

● முதல்வரின் செயலகத்தில் ராஜ தர்பார் நடத்தும் ஓர் அதிகாரி மேல், மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மிகவும் கடுப்பில் இருக்கிறார்களாம். தனது பொறுப்பில் இருக்கும் துறைகளைத் தவிர மற்ற விவகாரங்களிலும் தலையிட்டு உயரதிகாரிகளைச் சங்கடப்படுத்துவதுதான் காரணமாம். "முதல்வர் வீட்ல சொன்னாங்க" என்னும் வார்த்தைப் பிரயோகத்தை அடிக்கடி உபயோகப்படுத்துகிறாராம் அந்த அதிகாரி!

● அண்ணா பல்கலைக்கழகத்தின் சமீபத்திய நடவடிக்கையொன்று கல்வியாளர்களிடையே மிகுந்த அதிருப்தியை ஏற்படுத்தியுள்ளது. அண்ணா பல்கலைக் கழகத்தின் கீழ் இருந்தாலும் தன்னாட்சியுடன் செயல்பட்டு வந்த ஏ.சி. டெக்னாலஜி, கிண்டி பொறியியல் கல்லூரி, சென்னை தொழில்நுட்பக் கழகம் மற்றும் கட்டடக் கலைக் கல்லூரி ஆகியவற்றைத் தன்னாட்சியிலிருந்து விடுவித்து, பல்கலைக் கழகத்தின் ஒரு துறையாக மாற்றி விட்டார்கள். இனி பல்கலைக்கழக மேலிடம் விருப்பம்போல் இந்தக் கல்லூரி விவகாரங்களில் தலையிட முடியுமாம். இந்த நடவடிக்கையால் தமிழக அரசும் கவலையடைந்து விட்டதாம். ஆனால் பாட்டாளிகளின் ஆதரவு உள்ளவரை கவலை இல்லை என்று குதிக்கிறதாம் பல்கலைக் கழக மேலிடம்.

● இதய அறுவை சிகிச்சை செய்து கொண்டு ஓய்வு எடுத்து வரும் பொதுப் பணித் துறை அமைச்சர் துரை முருகன், "போரடிக்குது கோப்புகளையாவது அனுப்புங்கள்" என்கிறாராம். ஆனால் கூடுதல் பொறுப்பாக பொன்முடிக்கு பொதுப்பணியைக் கொடுத்திருக்கிற நிலையில், துரைமுருகனுக்குக் கோப்புகளை அனுப்ப அதிகாரிகள் தயங்குகிறார்களாம்.

— சஞ்சயன்

திடீரென்று தன் சட்டையைப் பிடித்து ஒருவன் இப்படி முரட்டுத்தனமாகப் பேசுவானென்று சற்றும் எதிர் பார்க்காத குமரன், தடுமாறி பேச்சு வராமல் திகைத்து நின்றான். ஆனால் குமரனின் கை அனிச்சையாக அந்த ரவுடியின் கையைத் தட்டிவிட்டது.

"என்ன, என்னடா முறைக்கிறே? மொதல்ல என் வண்டியை நிமித்தி வையிடாங்.." கெட்ட வார்த்தையில் இறங்கினான் அவன்.

"ஏய், மரியாதையாப் பேசு. நீ யார் கிட்ட பேசிட்டிருக்கேன்னு தெரியாது உனக்கு. இந்த வண்டி எப்படி கீழ விழுந்திச்சுன்னு எனக்குத் தெரியாது. என் வண்டி இடிக்கலை. தேவையில்லாம தகராறு செஞ்சா அப்பறம் போலீசைக் கூப்புடுவேன்" என்ற குமரன் தன் செல் போனை எடுக்க, அவன் மேலும் ஆவேசம் கொண்டான்.

"கூப்புடுடா உன் போலீசை. அவங்களே நியாயம் சொல்லட்டும்" என்று அவன் கத்த, இதற்குள் அங்கே சின்னக் கூட்டம் கூடிவிட்டது. அதில் கொஞ்சம் கட்டுமஸ்தாக இருந்தவன், "என்னப்பா இங்க பிரச்னை?" என்று லுங்கியை மடித்துக் கட்டிக்கொண்டு முன்னால் வந்தான்.

"வா அண்ணாத்தே, நீயே நியாயம் சொல்லு. என் வண்டிய இங்க நிறுத்திட்டு சிகரெட் வாங்க எதிர்கடைக்குப் போனேன். இந்த மைனரு சார்ருன்னு வந்து ஸ்டைலா காரை நிறுத்தினப்போ என் வண்டியை இடிச்சிட்டாரு. ஹெட் லைட் ஒடைஞ்சிருக்கு பாரு. இண்டி கேட்டரும் அவுட்டு. நான் கூப்புட கூப் புட இவர் பாட்டுக்கு உள்ள போயிட் டாரு. சரி, காரை எடுக்கறதுக்கு எப்படியும் வந்துதானே ஆகணும்னு வெயிட் பண்ணேன். கேட்டா நான் இடிக்கவே இல்லைன்னு சாதிக்கிறாரு."

"சார், வண்டிய இப்படி டேமேஜாக் கிட்டு சைலண்ட்டா நின்னா எப்படி சார்? ரிப்பேருக்கு எவ்வளவு ஆகும், என்னன்னு பேசி கரெக்ட் பண்ணிட்டுப் போய்க்கிட்டே இருப்பீங்களா, அதை விட்டுட்டு எதுக்குப் பிரச்னையைப் பெரிசு பண்ணிட்டிருக்கீங்க?" என்றான் திடீர் பஞ்சாயத்துக்காரன்.

"இத பாருங்க, இந்த வண்டியை நான் இடிக்கல. அப்படி இடிச்சிருந்தா அலட்சியமாப் போக மாட்டேன்" என்றான் உறுதியாக குமரன்.

"உங்க வண்டி இடிக்காம இந்த வண்டி எப்படிக் கீழ விழுந்திச்சு?"

"என்னைக் கேட்டா? அது எனக்குத் தெரியாது. ஒருவேளை காத்துலகூட விழுந்திருக்கலாம்."

"நான்தான் பாத்தேன்னு சொல்றேன்ல, உன் வண்டிதான் இடிச்சுது" என்றான் ரவுடி.

"இருப்பா. முதல்ல வண்டியை நிமித்திப் பாரு. சரி பண்றதுக்கு எவ்வளவு ஆகும்னு சொல்லு. சார்கிட்ட பேசி வாங்கித் தர்றேன்" என்றான் லுங்கி ஆசாமி.

வண்டியை நிமிர்த்திப் பார்த்து, மனசுக்குள் ஏதோ கணக்குகள் போட்டு, "எல்லாம் புதுசா வாங்கிப் போடணும்னா ரெண்டாயிரம் ஆகும். நான் பழைய மார்க்கெட்ல வாங்கிப் போட்டுக்கறேன். ஆயிரத்தைந்நூறு குடுக்கச் சொல்லு அண்ணாத்தே" என்றான் ரவுடி.







“கேட்டாலும் நியாயமா கேக்கணும்ப்பா. சாரு ஆயிரம் ரூபாதான் குடுப்பாரு. வாங்கிட்டுப் பேசாமப் போயிடு” என்ற லுங்கிக்காரன் குமரனிடம், “உங்களுக்கு ஆயிரம் ஜோலி இருக்கும் சார். எதுக்கு சார் இந்த வெறும் பயகிட்டல்லாம் நின்னு நேரத்தை வேஸ்ட் பண்றிங்க? ஆயிரம் எடுத்து இவன் மூஞ்சில வீசிட்டுப் போய்க்கிட்டே இருங்க சார்” என்றான்.

கைகளைக் கட்டிக் கொண்டு தன் கார் மேல் சாய்ந்து நின்று கொண்டு முறைப்பாக அவனைப் பார்த்த குமரன், “இதுல உனக்கு எவ்வளவு கமிஷன் தர்றதா சொல்லிருக்கான்? ம்? ரெண்டு பேரும் சேர்ந்துக்கிட்டு விளையாடறிங்களா? இத பாரு, நான் போறேன். என் வண்டி நம்பரை நோட் பண்ணிக்க. எந்த போலீஸ்ல வேணாலும் தாராளமாப் புகார் பண்ணிக்கலாம்” என்று நகர முற்பட்டவனைக்

# பட்டுக்கோட்டை பிரபாகர்

குறுக்கே கை நீட்டித் தடுத்தான் லுங்கி.

“என்னடா பெரிய ஹீரோ கணக்கா பேசறே? நியாயம் சொல்ல வந்தா என்னைப் பார்த்து அவனோட கூட்டான்னு கேக்கறியே, எவ்வளவு திமிருடா உனக்கு? இந்த விவகாரத்தை பைசல் பண்ணாம இங்கேர்ந்து போய்டுவியா நீ?” என்றவன் ரவுடியைப் பார்த்து, “டேய், சாரோட அழகான வண்டியைப் பதிலுக்கு லேசா டேமேஜ் பண்ணினேன்னு வையி, அப்புறம் சாரு நின்னு பேசுவாரு” என்றான்.

உடனே அந்த ரவுடி கீழே கிடந்த ஒரு பெரிய கல்லைக் கையில் எடுத்துக் கொண்டு குமரனின் காரை நெருங்கி, “கரெக்ட்டு அண்ணாத்தே. இவனுங்களுக்கு வாயால பேசினாப் புரியாது” என்றபடி காரின் கண்ணாடியை நோக்கி கையை ஓங்க... பதறித் தடுத்தான் குமரன்.

“டேடேய்.. இரு! பேசிக்கலாம். காரை ஒன்னும் பண்ணிடாதே.”

“சாரு சொல்றாருல்ல, கல்லைக் கீழேப் போடுடா.”

லுங்கி அதட்ட, ரவுடி கல்லைக் கீழே போட... குமரன் யோசித்தான். வம்பிழுத்து பணம் பறிக்கும் மோசடிக் கும்பலிடம் வசமாக மாட்டிக் கொண்டாயிற்று. இது ஒரு வழிப்பறி! பகல் கொள்ளை! காருக்குச் சேதமானால் பணம் வாங்க முடியாது. போலீஸ், இன்சூரன்ஸ் என்று அலைய வேண்டும். அதைவிட ஏதாவது கொடுத்துவிட்டு விலகுவதைத் தவிர வேறு வழியில்லை.

மணிபர்ஸிலிருந்து பணம் எடுத்து எண்ணியபடி, "ஐநூறு ரூபா தர்றேன். பிரச்னை பண்ணாமப் போயிடுங்க. செய்யாத தப்புக்குத் தண்டமாக் கொடுக்க வேண்டியதா இருக்கு" என்றான் குமரன்.

"சரி சரி, இருநூறு ரூபா சேத்துக் குடு சார்!"

"ஒரு பைசாகூட குடுக்காதீங்க. பணத்தை உள்ளே வைங்க, குமரன்!"

> "உங்களுக்கு எந்த சீரியல் ரொம்ப பிடிக்கும்?"
>
> "என் மனைவியை அழ வைக்கிற எல்லா சீரியலுமே பிடிக்கும்."
>
> **- ஜோசப் காமராஜ்**

என்று ஒரு குரல் கேட்க, நிமிர்ந்து பார்த்தான் குமரன்.

ஜீன்ஸ் பேண்ட்டும், அரைக்கை சட்டையும் அணிந்திருந்த அந்த இளைஞன் கூட்டத்திலிருந்து அவர்களை நோக்கி வந்தான். குமரனுக்கு அவனை அடையாளம் தெரியவில்லை.

"டேய், நீ யார்றா பணம் குடுக்க வேணாம்னு சொல்றதுக்கு? பேத்துடுவேன். உன் வேலையைப் பாத்துட்டுப் போ!" என்று கை நீட்டிப் பேசிய லுங்கிக்காரனைச் சட்டென்று முகத்தில் குத்தினான் இளைஞன்.

"பிச்சிடுவேன் ராஸ்கல்! ரெண்டு பேரும் எவ்வளவு தூரம்தான் போறீங்கன்னு கொஞ்ச நேரம் பொறுமையா பாத்துக்கிட்டிருந்தேன். இந்தப் பொறுக்கி தன் வண்டியை வேணும்னே கீழே சாய்ச்சு விட்டதை நான் கண்ணால பாத்தேன். டிராமாவா பண்றீங்க ராஸ்கல்ஸ்! இப்படி மிரட்டி சம்பாதிக்கிறதுக்கு வெக்கமா இல்லை? என்னடா பார்வை! ரெண்டு நிமிஷத்துல இடத்தைக் காலி பண்ணலை, கை கால் சேதத்தோடதான் வீட்டுக்குப் போவீங்க. கராத்தேல பிளாக் பெல்ட் வாங்கிருக்கேன். வேணும்னா கிட்ட வா, நிரூபிக்கிறேன். வாடா!"

அந்த இளைஞன் ஆவேசமாப் பேச... ரெண்டு பேரும் அமைதியாகி, எதுவுமே பேசாமல் வண்டியை நகர்த்திக் கொண்டு நடந்தார்கள்.

லுங்கிக்காரன் திரும்பி, "மவனே, நீ என் கைல மாட்டுவாடா! உன்னை வெச்சுக்கிறேன்" என்றான்.

"இங்க இப்பவே கூப்புடறேன்ல... வா, வந்து வச்சிக்கடா! போய்க்கிட்டே பேசறியே... நில்லுடா! நான் வரட்டுமா?"

ரெண்டு பேரும் வேகமாக நடக்கத் துவங்க... "ரொம்ப தேங்க்ஸ் சார். நீங்க யாருன்னு எனக்கு ஞாபகமில்லையே... எப்படி என் பேரைக் கரெக்ட்டா சொல்லிக் கூப்பிட்டீங்க?" என்றான் குமரன்.

"உங்களை எனக்குத் தெரியும் குமரன். என்னை உங்களுக்கு அறிமுகம் இல்லை. சென்னை பிரசிடென்சி காலேஜ்லதானே நீங்க படிச்சீங்க?"

"ஆமாம்!"

"நானும் நீங்க படிச்ச அதே பீரியட்ல அதே காலேஜ்லதான் படிச்சேன். நீங்க பி.காம். பண்ணீங்க. நான் பி.எஸ்.சி. கெமிஸ்ட்ரி பண்ணேன். நீங்க பேச்சுப் போட்டி, நாடகப் போட்டின்னு கப்பா வாங்கிக் குவிப்பீங்க. அதுவும் இல்லாம ஸ்டூடன்ட்ஸ் கவுன்சிலுக்கு சேர்மனா எலெக்ஷன்ல நின்னு ஜெயிச்சீங்களே.. காலேஜ்ல நீங்க ரொம்ப பாப்புலராச்சே!"

"தேங்க்யூ. வாங்க ஒரு கூல்ட்ரிங் சாப்பிடலாம். ப்ளீஸ்..."

இருவரும் அருகில் இருந்த கடைக்குள் சென்று அமர்ந்தார்கள். குளிரூட்டப்பட்ட அந்த அறையில் ஒவ்வொரு மேஜையிலும் முரட்டு மெழுகுவர்த்திகளை டெர்ரக்கோட்டா குடுவைகளில் அடைத்து வைத்திருந்தார்கள்.

"ஆமாம், உங்க பேரு?" என்றான் குமரன்.

"பத்ரி."

"நீங்க பாண்டிச்சேரிலதான் இருக்கிங்களா?"

"ஆமாம். இங்க சித்ரா கெமிக்கல் இண்டஸ்ட்ரிஸ்ல சூபர்வைசரா ஒரு வாரம் முன்னாடிதான் சேர்ந்தேன். இதுக்கு முன்னாடி சென்னைல ரெண்டு மூணு கம்பெனிகள்ல வேலை பார்த்தேன்."

"எங்க தங்கிருக்கிங்க?"

"முதலியார்பேட்டைல ஒரு மாடி போர்ஷன் வாடகைக்கு எடுத்திருக்கேன். தங்கத் தோட்டம் நகைக்கடை உங்களோடதுதானே குமரன்?"

"ஆமாம். எம்.காம். முடிச்சிட்டு அப்பாவோட சேர்ந்து பிசினஸ் பார்த்துட்டிருக்கேன். சரியான நேரத்துக்கு வந்தீங்க, பத்ரி. இல்லைன்னா எங்கிட்டேர்ந்து ஐநூறோ, எழுநூறோ பிடுங்கிருப்பாங்க. ஆமாம், எங்க கராத்தே கத்துக்கிட்டீங்க?"

"சினிமா தியேட்டர்லயும், டீ.வி.லயும். அதாவது... ஜாக்கிசான் படத்தை சினிமா தியேட்டர்லயும் டீ.வி.லயும் தானே பாக்க முடியும்?" என்று சிரித்தான் பத்ரி.

"அப்படின்னா கராத்தே தெரியும்னு அவங்ககிட்ட சும்மா பந்தாவிட்டீங்களா? பாத்துங்க. எச்சரிக்கையா இருங்க."

"நீங்க வேற. இதெல்லாம் குலைக்கிற நாய்ங்க! காலேஜ்ல உங்களுக்குன்னு ஒரு செட் இருக்குமே... கேண்டீன் வாசல்ல பைக்கைப் போட்டு உக்காந்து அலம்பல் பண்ணுவீங்களே... பிரதீப், விஜயராகவன், முருகேசன், பிரபு... எல்லாரும் செட்டில் ஆயிட்டாங்களா?"

"வாவ்! எல்லார் பேரையும் ஞாபகமா சொல்றீங்களே.. பிரபு ஸ்டேட்ஸ்ல இருக்கான். இப்ப கல்யாணம் பண்ணிக்கிறதுக்காக வந்திருக்கான். பிரதீப் திருச்சில பி.ஹெச்.ஈ.எல்.லுல வேலை பண்றான். விஜி ரைஸ் மில்! முருகேசன் சப்ஜெயில் சூப்பிரண்டெண்ட்டா இருக்கான்."

"உங்க செட் அவ்வளவு பிரபலம். நீங்க எலெக்‌ஷன்ல நின்னப்ப யானை, குதிரை எல்லாம் கொண்டாந்து, பத்தாயிரம் வாலா பட்டாசு வெடிச்சு அமர்க்களம் பண்ணீங்களே. அரசியல்வாதிங்க பண்ற மாதிரி உங்களை சப்போர்ட் பண்ணின கிளாஸ் ரெப்ஸ் எல்லாரையும் நட்சத்திர ஹோட்டல் கூட்டிட்டுப் போய்த் தங்க வெச்சு மூணு நாளைக்கு விஸ்கிலயே குளிப்பாட்டின கதை எல்லாம் தெரியும் குமரன்" என்று பத்ரி சிரிக்க, அவன் சிரிப்போடு இணைந்து கொண்ட குமரன் பெருமூச்சுவிட்டான்.

"காலேஜ் நாட்கள் ஒரு வரம்தான் பத்ரி! பொறுப்பே இல்லாத உற்சாகமான நிமிஷங்கள். எங்கப்பாவோ எனக்கு ஏகப்பட்ட செல்லம் குடுக்கறவரு! காசுக்கு அளவேயில்லை. வாரி இறைச்சிட்டிருந்தேன். ஆனா எல்லை மீறி ஆட்டம் போட்டதில்லை."

வந்த ஆரஞ்சுப் பழ ரசத்தை இருவரும் பருகத் துவங்கினார்கள்.

"பத்ரி, எனக்கு ஒரு ஆதங்கம். காலேஜ் நாட்கள்ல ஒண்ணா இருந்த என் நண்பர்



கள் யாருமே இப்ப என் பக்கத்துல இல்லை. எல்லாரும் திசைக்கு ஒருத்தரா பிரிஞ்சிட்டாங்க. அடிக்கடி போன்ல பேசிக்கிட்டாலும் எப்பவாவதுதான் சந்திக்க முடியுது. சொல்லப்போனா பாண்டிச்சேரில எனக்கு ஒரு ஃப்ரண்ட் கூட இல்லைங்க."

"பொய் சொல்லாதிங்க குமரன். ஒரு ஃப்ரண்ட் இருக்காரு. அவர் பேரு பத்ரி" என்று சிரித்தான், "ஏன், என்னை ஃப்ரண்டா நினைக்க மாட்டீங்களா?"

"சேச்சே! எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு" என்ற குமரன் தன் விசிட்டிங் கார்டு எடுத்துத் தந்து, "எப்ப வேணாலும் எனக்கு போன் பண்ணுங்க பத்ரி. அடிக்கடி சந்திக்கலாம். முதல்ல

## தொடர்கதை




வர்ற சண்டே எங்க வீட்ல லன்ச் சாப்பிட நீங்க வரணும். என் ட்ரீட்! வருவீங்களா?'' என்றான்.

''எதுக்கு ட்ரீட்?''

''எனக்கொரு ஃப்ரெண்ட் கிடைச்சதுக்காகன்னு வெச்சுக்கலாமே.''

''அப்புறம்... கேக்க மறந்துட்டேன். அந்த பூஜாவைத்தானே நீங்க கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க குமரன்?''

பத்ரி இயல்பாகக் கேட்ட கேள்வி குமரனின் முகத்தில் இருந்த உற்சாகத்தை உடனே வடிய வைத்தது.

**ம**யில்பட்டியில் அந்தக் குளக்கரையில் சைக்கிள்களை நிறுத்தி, அதில் துணிகளை கிளிப் வைத்துவிட்டு தண்ணீரில் இறங்கி குளிக்கத் துவங்கினார்கள் சிவாவும், அவனது நண்பன் சிங்கமுத்துவும்.

உடம்பைத் தேய்த்து விட்டுக் கொண்டபடி சிங்கமுத்து. ''என்ன சிவா, தங்கச்சி கல்யாண வேலை எல்லாம் எப்படி நடக்குது?'' என்றான்.

''ஊருக்கும், உறவுக்கும் பத்திரிகை வைக்கிறதைத் தவிர எனக்கு ஒரு வேலையும் இல்லைப்பா. கல்யாணம் பாண்டிச்சேரில. எல்லா செலவும் அவங்களுது. ஒரு குண்டுமணிகூட நீங்க வாங்கத் தேவையில்லைன்னு சொல்லிட்டாங்க. கார் அனுப்புவாங்க. ஜோரா போய் முதல் வரிசைல உக்காந்து அட்சதை போட வேண்டியதுதான் வேலை'' என்றான் சிவா.

''சிவா, நான் ஒண்ணு சொன்னா தப்பா நினைக்காதே! அவங்க அந்தஸ்துக்கு ஆயிரம் பொண்ணுங்க கிடைப்பாங்க. எதுக்கு இப்படி கிராமத்துல, வசதி குறைச்சலான இடத்துல பொண்ணு எடுக்கறாங்கன்னு ஊர்ல பேசிக்கிறாங்கப்பா.''

''இதுல பேசறதுக்கு என்ன இருக்கு? ஏகப்பட்ட சொத்து இருக்கறதால குணமான பொண்ணு போதும்னு முடிவு செஞ்சிருக்காங்க.''

''வேற மாதிரியும் சொல்லலாம்ல?''

''வேற எப்படி?''

''பெரிய எடத்துல ஏதாச்சும் விவகாரம் இருக்கலாம். வசதி கம்மியான எடத்துல சம்பந்தம் செஞ்சா, நாளைக்கு வில்லங்கம் வெளில தெரிஞ்சி கேள்வி கேட்டாலும் அடக்கி வைக்கிறதுக்கு சௌகரியமா இருக்கும்ல?''

''சிங்கா! என்னடா சொல்றே? வில்லங்கம், விவகாரம்னு எதைச் சொல்றே?''

''பையன் சென்னைல காலேஜ்ல படிச்சவருன்னு சொன்னே. கோடீஸ்வரனோட ஒரே பையன். உன் தங்கச்சி மாதிரி ஒழுக்கமா இருந்தவனான்னு எப்படித் தெரியும்? ஏதோ மனசுல பட்டுச்சு; கேட்டேன். வருத்தப்படாதே!''

சிங்கமுத்து கரையேறிவிட, தண்ணீரிலேயே நின்றிருந்த சிவாவின் மனதை குப்பென்று ஒரு பயம் கவ்வியது.

(தொடரும்)

**த**மிழில் பிடித்த நடிகை அஸின், த்ரிஷா...

செல்வராகவன் இயக்கத்தில் மிரட்டப் போகிறாராம்...

ரஜினியுடன் ஒரு படத்திலாவது நடிப்பது அடி மன ஆசை...

லேட்டஸ்ட் மகிழ்ச்சி - தினமும் மகள் தன் மடி மீது உச்சா போவது...

வாஷிங்டன் ஆகஸ்ட் 10: விண்வெளி ஆராய்ச்சியின் ஒரு பகுதியாக செவ்வாய்கிரகம் பற்றிய ஆராய்ச்சியிலும் விஞ்ஞானிகள் தீவிரம் காட்டி வருகிறார்கள். செவ்வாய்க்கிழமை வார விடுமுறை தவிர, மற்ற நாள்களில் செவ்வாயைப் பற்றிப் புதுப் புது தகவல்களை வெளியிட்டு வருகின்றனர்.

செவ்வாய் கிரகம் சூரியனில் இருந்து இருபத்து மூன்று கோடியே எழுபத்து ஏழு லட்சத்து முப்பத்து மூணே முக்காலாயிரத்து நாற்பது கிலோ மீட்டர், எட்டு மில்லிமீட்டர் தொலைவில் உள்ளது.

உடைந்து போன ஆடியோ சிடி-க்கள், சிதைந்து போன வாக்மேன் போன்ற ஆதாரங்கள் கிடைத்ததைத் தொடர்ந்து, செவ்வாய் கிரகத்தில் இசை இருக்க பிரகாசமான வாய்ப்புகள் உள்ளதாகக் கூறப்பட்டது. இதைத் தொடர்ந்து செவ்வாயில் மனிதன் பாட முடியுமா என்பது குறித்து ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

# செவ்வாயில் பாட முடியுமா?



*பாட முடியாது*

இந்நிலையில், செவ்வாய், மனிதன் பாடுவதற்கு ஏற்ற கிரகம் அல்ல; அங்கு மனிதனால் ஸ்ருதி சுத்தமாகப் பாட முடியாது என அமெரிக்காவின் மெக்சிகன் பல்கலைக்கழகத்தில் குரல் இயல் மற்றும் குரல்வளைத் துறையின் பேராசிரியர் வோன் மித்ரேயோ கூறியிருக்கிறார். இவர் ஓர் இந்தியர்.

தனது ஆய்வு முடிவு பற்றி அவர் எழுதியுள்ள புத்தகத்தில் கூறியிருப்பதாவது: செவ்வாய் கிரகத்தில் இசை இருப்பதற்கான ஆதாரங்கள் கிடைத்திருந்தாலும் அங்கு மனிதன் பாடுவதற்கு ஏற்ற சூழ்நிலை இல்லை. பூமியிலிருந்து இசை அலைகளை சாட்டிலைட்டுக்குச் செலுத்தி, சாட்டிலைட்டிலிருந்து செவ்வாய் கிரகத்துக்கு அனுப்பி, அதிலிருந்து எக்கோ ஒலிக்கும் வேகத்தைக் கணக்கிட்டு ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

செவ்வாய் கிரகத்தில் உள்ள தூசிப் படலம் மிகவும் பயங்கரமானது. புழுதிப் புயலும் சூறாவளியும் மிகவும் வேகமாக வீசும். இதனால் செவ்வாய் கிரகத்தில் நின்று பாடுவதென்பது இயலாத காரியம். தொண்டையும் குரலும் பாதிக்கப்படும்.

பூமியில் பாடுவதற்கும் செவ்வாயில் பாடுவதற்கும் நிறைய ஸ்வர வேறுபாடுகள் உள்ளன. செவ்வாயில் சூழலில் அடர்த்தி அதிகமிருப்பதால் குறைந்தபட்சம் ஒன்பது ஸ்வரங்களாவது தேவையிருக்கும்.

இவ்வாறு அவர் கூறியுள்ளார்.

*ஓர் இசைக்குழுவை செவ்வாய்க்கு அனுப்பி, இது பற்றி ஆராய்ச்சிகள் மேற்கொள்ளலாம் என அமெரிக்கா முடிவு செய்துள்ளது. இதற்காக பல்வேறு இசைக் குழுவினர் விண்ணப்பித்த வண்ணம் உள்ளனர்.*

- முகில்

## குகை மா.புகழேந்தி

நான்
மௌனமாய்க் காத்திருக்கிறேன்

யாரோ பற்றவைத்த
என் இரவு
தீப்பிடித்த கருப்புக் காகிதமாய்
எரிந்து சாம்பலாகிவிட்டது

நினைவின் மையத்துள்
எப்பொழுதும் நீங்காத புதர் இருளாய்
நிலைத்திருக்கிறது
சொல்ல முடியாத ஒன்று

சருகுகள் உதிர்ந்து நிறைந்த
பெரும் வனத்தின் அடர் தனிமை
என்னைச் சுற்றிலும்
பெருகி வளர்கிறது

மௌனத்தின்மீது சரியும்
மௌனமாய்
வேகமாய்ப் பறக்கும்

காலப் பறவையின் சிறகிலிருந்து
உதிரும் இறகொன்று
என்மீது விழுகிறது

உதிர்ந்தது
யாருடைய காலமென்று தெரியாமல்
உள்ளங்கையில் ஒளித்து வைத்த
உணர்வில்

எப்பொழுதோ
எனக்கென நீ அழுதபோது
வழிந்த கண்ணீர்த் துளியைப்
பத்திரப்படுத்தி
அதன் அருகிலேயே
அமர்ந்து கொண்டிருந்த ஞாபகம்
மிகவும் ஆறுதலாயிருக்கிறது

மறுபடி மறுபடி
எனது எல்லா மௌனத்திலும்
நீயே நிறைகிறாய்

# மௌனத்துள் நிறைகிறாய்!





"அரசே! அவையைக் கூட்டி வெகு நாட்களாகிவிட்டன!"

"யாரங்கே, உடனே பணிப்பெண்ணை வரச்சொல்லும்!"

- லீலாஜி

"டீ.வி. பார்த்துக்கிட்டே சாப்பிடாதேன்னு சொன்னேனே, கேட்டியா?"

"ஏன், இப்ப என்னாச்சு?"

"முறுக்குக்குப் பதிலா கொசுவர்த்திச் சுருளைச் சாப்பிட்டிட்டிருக்கே!"

- பா.விஜயசாரதி







"நல்ல கதை கிடைச்சா சம்பளம் வாங்காம நடிப்பேன்னு சொன்னீங்களே. என்கிட்ட நல்ல கதை இருக்கு.. நடிக்கறீங்களா?"

"நான் அப்படி பேட்டி குடுத்ததே ஒரு நடிப்பு தானுங்களே!"

- அம்பை தேவா

''பார்வை சரியில்லை டாக்டர்!''

''நர்சும் இதையேதான் சொன்னாங்க!''

- அம்பை தேவா





# பார்வை சரியில்லை டாக்டர்!



''வைத்தியரே! என்னோட சர்க்கரை நோய் கட்டுக்குள்தான் இருக்கு!''

''எப்படிச் சொல்றீங்க மன்னா?''

''என் புறமுதுகுப் புண்கள் நாலே நாளில் ஆறிடுச்சே!''

- லீலாஜி



''யுவர் ஆனர், நான் கொள்ளையடிச்சது கூட்டுறவு பேங்க்ல. அங்கே வாங்கற லோனை மட்டும் தள்ளுபடி பண்றீங்க, கேஸைத் தள்ளுபடி பண்ணக் கூடாதா?''

- சென்னிமலை செந்தில்குமார்

ஆன்மிகம்

# மாவூற்று வேலப்பர்!

ஞானப்பழ விவகாரத்தில் கோபம்கொண்டு வெளியேறிய முருகனைத் தடுத்து "முருகா! பூலோகத்தில் நீ இருக்கப் போகும் இடம் எது?" என்று அன்னை பார்வதி தேவியார் கேட்டார். அப்போது முருகன் "அன்னையே! இந்த வேலை, நான் பூமியை நோக்கி வீசப் போகிறேன். இது எங்கே போய் தைக்குமோ, அங்கே நான் இருக்கப்போகிறேன்" என்று கூறி, தன் கையில் இருந்த வேலை பூமியை நோக்கி வீசினார்.



அது பாண்டிய நாட்டில் (தற்போதைய தேனி மாவட்டம், ஆண்டிபட்டிக்குத் தெற்கே சுமார் 20 கிலோ மைல் தொலைவில் உள்ள மலையில்), வெட்டப்பட்ட 'மா' மரத்தின் அடிப்பாகத்தில் தைத்தது. அங்கு வந்த பாலகனான முருகன் வேலை எடுத்தான்.

அப்போது மரத்திலிருந்து நீரூற்று தோன்றி பெருக்கெடுத்து ஓடியது. வெட்டப்பட்ட 'மா' மரத்திலிருந்து ஊற்று வருவதால் அந்த இடம் மாவூற்று என்றும் அங்கே குடிகொண்ட முருகனை வேலப்பர் என்றும் மக்கள் துதித்து வணங்குகின்றனர். மக்கள் கண்ணில் படாமல் இருந்த முருகன், காலப்போக்கில் மண்ணுக்குள்ளே புதையுண்டு போனார்.

மண்ணிலிருந்து வெளிவந்து மக்களுக்கு அருள் வழங்க வேண்டிய காலம் வந்தது. அப்போது அந்தப் பூமி கண்டமனூர் ஜமீனுக்குச் சொந்தமானதாக இருந்தது. பெருமாள் கோயில் ஒன்றும், அதனருகில் மலையுடன் கூடிய நிலப்பகுதியும் இருந்தன. அந்த நிலத்தில் மலைவாசிகளான பளியர் இனமக்கள் குடிசைகள் போட்டு வசித்து வந்தனர்.

அந்த மக்களில் வேலாயி, வேலன் என்ற வயதான தம்பதியினர், ஜமீன்தாரிடம் பல வருடங்களாக வேலை பார்த்து வந்தனர். வேலன் ஜமீன்தார் இட்ட பணிகளைச் செய்யும் போது, தன் இன மக்களும் பாதிப்படையும் வகையான வேலைகளைச் செய்ய வேண்டியிருந்தது.

ஓர் நாள் வேலனின் வேலையில் குறைகண்ட ஜமீன்தார் கடுமையாகக் கோபித்து, சவுக்கால் அடித்துக் கொண்டிருந்தார். வேலனின் கூக்குரலைக் கேட்டு அருகிலிருந்த தன் குடிசையிலிருந்து ஓடி வந்த வேலாயி, தன் கணவனை அடிக்கும் ஜமீன்தாரை கடுஞ்சொற்களால் ஏசிவிட்டாள். அதனால் இருவரும் வெளியேற்றப்பட்டனர்.

வேலனும் வேலாயியும் மலையில் மறைந்து வாழலாம் என்று கருதி மலையை நோக்கி நடந்தனர். சிறிது தூரத்தில் வள்ளிக்கிழங்கின் கொடி நுனி ஒன்று தெரிந்தது. அதனைத் தொடர்ந்து சென்றனர். ஒரு குன்றில் போய் முடிந்த கொடியின் அடிப்பகுதியைக் கண்டு பூமியைத் தோண்டினர். கிழங்கு தோண்டப் பயன்படுத்தும் 'கல்லு திரணிக்குச்சி' என்ற கம்பால் கிழங்கைக் குத்தினாள் வேலாயி. அப்போது குழந்தையின் அழுகுரலோடு அந்த இடத்தில் ரத்தம் பீறிட்டு வந்தது. வேலாயி தன்னை மறந்து 'வேல்', 'வேல்' என்று குரல் கொடுத்துக் கொண்டே ஆடினாள்.

கிழங்கில் ரத்தம் வந்த பகுதியில், சிலை வடிவில் இருந்த குழந்தை முருகன் அழுது கொண்டிருப்பதைக் கண்டான் வேலன். சிலையிருந்த இடம் கண்டமனூர் ஜமீனுக்

குச் சொந்தமான நிலம் என்பதால் அவரிடம் இந்தத் தகவலைச் சொல்ல வேலன், வேலாயி இருவரும் விரைந்தனர்.

பணியாட்கள் வேலாயியை மட்டும் உள்ளே வரவழைத்து கம்பால் அடித்தனர். வேலாயி எந்த வேதனையும் படவில்லை. அதைக் கண்டு கோபமடைந்த ஜமீன்தார் தானே முன்வந்து வேலாயியை அடித்தார். தன் கை வலி எடுக்க, வேலாயி அமைதியாக இருப்பதைக் கண்டவர் அவளிடம் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது என்பதை உணர்ந்தார்.

விஷயமறிந்து ஜமீன்தாரும், ஏழு கிராம மக்களும் கொட்டு முழக்கோடு மலையை அடைந்தனர். வேலனும் வேலாயியும் காட்டிய இடத்தில் முருகன் பாலகனாக சிலை வடிவில் இருப்பதைக் கண்டு அனைவரும் வியந்து கைகூப்பி வணங்கினர். அந்நேரத்தில் மலையில் வேலப்பர் சிலையாக இருந்த இடத்திற்குக் கிழக்கே, 'மா'வூற்றுப் பகுதிக்குச் சென்ற வேலன், வேலாயி இருவரும் மறைந்தனர். அதன் பின் ஜமீன்தாரின் முயற்சியால் கோயில் கட்டப்பட்டது. மக்கள் 'மாவூற்று வேலப்பர்' என்றே முருகனை அழைக்கின்றனர்.

தற்போது கோயில் கருவறையில் புதிய சிலையுடன் பழைய சிலையும் இருக்கிறது. அந்தப் பழைய சிலையில் வேலாயி, குச்சியால் குத்தப்பட்டு இருப்பதாகக் கோயில் பூசாரி 90 வயது அன்னகாமுவின் தம்பி மகன் முருகன் கூறுகிறார். இந்து அறநிலையத் துறையின் கீழ் கோயில் வந்துவிட்டாலும், பரம்பரை, பரம்பரையாக இங்கே மலைவாழ் மக்களான பளியர் இனமக்களே பூசாரிகளாக இருந்து வேலப்பருக்குச் சேவை செய்து வருகிறார்கள்.

குன்றின் மேல் முதலில் விநாயகரும், அடுத்து வேலப்பர் கோயிலைப் பார்த்தபடி மயில் வாகனமும் இருக்கிறது. கிழக்கே மாவூற்று சிறு அருவியாக பள்ளத்தில் விழுந்து ஓடுகிறது.

ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதம் முதல் தேதி திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. லட்சக்கணக்கில் மக்கள் கூடுகிறார்கள். அதைத் தொடர்ந்து சித்திரை முதல் தேதி எந்தக் கிழமையில் வந்ததோ, அதே கிழமைகளில் 5 வாரங்கள் மறு பூசைத் திருவிழா கொண்டாடப்படுகிறது.

ஆண்டிபட்டியிலிருந்து சுமார் 20 கிலோ மீட்டர் தூரத்திலும், தேனியிலிருந்து சுமார் 30 கிலோ மீட்டர் தூரத்திலும் உள்ள மாவூற்று வேலப்பரை தரிசிக்க நீங்கள் எப்போது வரப் போகிறீர்கள்?

**- பொ.கணேச பாண்டியன்**



▲ வேலப்பர் சந்நிதி...

**சிறுகதை**

## படுதலம் சுகுமாரன்

**ஊ**ருக்குப் போயிருந்தேன். கிட்டத்தட்ட இரண்டு வருட இடைவெளி. ஊரில் நிறைய மாற்றங்கள். ஆனால் நான் எதிர்பார்த்த ஒரு மாற்றம் மட்டும் நிகழாமலே இருந்தது.

ஜெகதாவிற்கு இன்னும் கல்யாணமாகியிருக்கவில்லை. அதைப் பற்றி அவள் கவலைப்பட்டதாகவும் தெரியவில்லை.

''உன் நினைவில் வாழ்ந்துக்கிட்டிருக்கிற சுகம் ஒண்ணே போதும் எனக்கு...'' என்று சொல்லிச் சிரித்துவிட்டுப் போனாள்.

மனதில் மகிழ்ச்சிக்குப் பதில் வேதனைதான் நிரம்பியது.

"யாருங்க அது..."- மனைவி கற்பகம் விசாரித்ததற்கு, "நல்ல பொண்ணுதான். ஆனால், அதிர்ஷ்டக் கட்டை! சாமர்த்தியமும் போறாது. எப்படித்தான் கரையேறப் போறாளோ..." என்று அம்மா அங்கலாய்க்க,

"எல்லாம் உன்னாலதான்..." என்று மனசுக்குள் நொந்து கொண்டேன்.

**கா**தல்.

வினோதமானது.

அந்த நாகம் தீண்டாத ஜீவன்கள் உண்டோ உலகில்.... நானும் ஜெகதாவும் அதற்கு விதிவிலக்கில்லை. மேட்டுத் தெரு சுப்ரமண்ய மாமாவின் மகள்தான் இந்த ஜெகதா. பிறந்தவுடனே தாயை முழுங்கிட்டாளாம். அதனால் 'அதிர்ஷ்டக் கட்டை' என்று பெயர் வைத்து விட்டார்கள்.

"பிறந்த குழந்தையால் ஒரு பருக்கை சோறுகூட முழுங்க முடியாது. அப்புறம் எப்படி அம்மாவை முழுங்க முடியும்" என்ற உலக மகா சந்தேகம் சிறு வயதில் என் மனதைப் பிடித்து ஆட்டி வைத்தது.

ஜெகதா மீது ஓர் அனுதாபம்தான் ஆரம்பத்தில்.

சேர்ந்து ஸ்கூலுக்குப் போகத் துவங்கிய போது, மென்மையாய் ஒரு நட்பு வளர்ந்தது.

ஸ்கூலிலும், வழியிலும் ஜெகதாவை யாரும் வம்புக்கு இழுக்காதபடி நான் அரணாக நின்று பார்த்துக்கொள்வேன்.

"அவளை நீ கட்டிக்கப் போறியா..." என்று கிண்டல் பண்ணுவான் துடுக்குப் பயல் மாரிமுத்து. நான் கொஞ்சமும் தயங்காமல்,



"ஆமாடா... அதுக்கென்ன இப்போ" என்று எதிர்த்துப் பேச, அவன் அதை எல்லாரிடமும் சொல்லிக்கொண்டு திரிந்தான்.

கல்யாணம் என்றால், என்னவென்று

தெரியாத வயதில் அதை உச்சரிப்பதும், அதில் உறுதியாய் நிற்பதும் ரொம்ப சுலப மாக இருந்தது.

குழந்தைகளாகவே இருந்துவிட்டால், நிறைய விஷயங்கள் சுலபம்தான்.

வளர வளரத்தானே வந்து சேர்கிறது, குழப்பமும், பலவீனமும்.




# கொல்லாமல் கொல்லும்!

**ப**த்தாம் வகுப்புவரை படித்தது போதுமென்று ஜெகதாவை ஸ்கூலை விட்டு நிறுத்திவிட்டார் அவள் அப்பா.

பிறகு அவளைச் சந்திப்பது அபூர்வ மாகிவிட்டது.

ஜெகதாவை மேலும் படிக்க வைத்து, வேலையில் அமர்த்திப் பார்க்க எனக்கு ஆசை.

அவள் அப்பாவிடம் இதுகுறித்து பேசிப் பார்த்தேன்.

''இந்தப் படிப்புக்கே, என்னால பொருத்தமான மாப்பிள்ளை தேட முடி யாது. இன்னும் படிக்க வச்சிட்டு, அதுக்கேத்த மாப்பிள்ளையை நான் எங்க போய்த் தேட...'' என்று அலுத்துக் கொண்டார்.

''ஜெகதா கல்யாணத்துக்கு என்ன அவசரம். படிச்சு ஒரு வேலைக்குப் போய் சொந்தக் கால்ல நின்னுட்டா, வரன்கள் தானாகத் தேடி வரும். யாரையும் சார்ந்து நிற்க வேணாமே...'' என்று வாதிட்டேன்.

''கேட்க நல்லாருக்கு. ஆனா எனக்குச் சவுகரியப்படாது. போய் உன் வேலை யைப் பாரு..'' என்று நிர்தாட்சண்யமாகச் சொல்லிவிட்டார்.

''எனக்காக மெனக்கெடாதே பாபு. எனக்கும் சேர்த்து நீ படி.. பெரிய ஆளா வா. அதுதான் எனக்கும் சந்தோஷம்'' என்றாள் ஜெகதா.

நான் மேலே படித்ததற்கு அவளது விருப்பமும், தூண்டுதலும் ஒரு காரணம். இல்லாவிட்டால் பள்ளி இறுதியோடு நின்றுகொண்டு, அவளுக்கேற்ற மாப் பிள்ளையாய் மாறியிருப்பேன்.

**இ**டைப்பட்ட காலத்தில் எப்போது எங்களுக்குள் அந்த இரசாயன மாற்றம்

சிறுகதை



"நம்ம காதல் எங்க அப்பாவுக்குத் தெரிஞ்சு போச்சு!"

"ஐயையோ... அப்புறம் என்ன சொன்னார்?"

"இவனையாவது கல்யாணம் பண்ணிப்பியான்னு கேட்டார்!"

- பி.பொன் காவியா

நடந்ததோ தெரியவில்லை.

ஒருமுறை...

என்னைக் கண்டதும் சட்டென்று விலகி நின்று, தலை கவிழ்ந்து...

"பாபு... நல்லா படிக்கிறியா..." என்று விசாரித்தாள் ஜெகதா.

'அட..... இது புதுசா இருக்கே...' என்று தோன்றியது.

எனக்கும், "என்ன ஜெகா... சாப்டியா..." என்று இயல்பாய்க் கேட்க வரவில்லை. பேச்சுக்குத் தேவையில்லாமல், பார்த்துக் கொண்டு நின்றாலே போதும் போலிருந்தது.

நாலுபேர் அறிய நடுத்தெருவில் நின்று பேசியதெல்லாம் போய், குளக்கரை, கோயில், தோப்பு ஓரம்... என்று ஆள் இல்லாத நேரங்களில் தனிமையில் மணிக் கணக்கில் பேசிப் பேசி மாய்ந்தோம்.

என்ன பேசினோம் என்று கேட்டால், ஒன்றும் ஞாபகத்தில் இல்லை. ஏதாவது அர்த்தத்தோடு பேசியிருந்தால்தானே...

என்னமோ பேசுவோம்... காரணமே இல்லாமல் சிரித்துக்கொள்வோம். அழுகையும் அப்படித்தான். ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே மனம் நெகிழும். கண் கலங்கும். விம்மி விம்மி அழுவாள். 'பாபு... பாபு' என்று கட்டிக் கொள்வாள். எனக்கும் அழுகை வரும். பரவசமான அழுகை. கண்ணீர்கூட சுகமாயிருந்த காலம்.

நான் படிப்பை நிறுத்தி, பெட்டிக்கடை போட்டுக் கொண்டு உட்காரப் போவதாக சொன்னபோது தலையிலடித்து சத்தியம் வாங்கினாள்.

"நீ இன்ஜினியராகணும்... பெரிய கம்பெனில, பெரிய உத்யோகத்துல உட்காரணும். கை நிறையச் சம்பாதிக்கணும். காரு, பங்களா வாங்கணும்..." விழிகள் விரிய அவள் சொன்னபோது,

"புரியுது... உனக்கு இன்ஜினியர் புருஷன் வேணும். பெட்டிக் கடை ஆசாமின்னா கௌரவமாயிருக்காதுன்னு நினைக்கற... ரொம்பத்தான் பேராசை..." என்று செல்லமாக அவள் தலையில் குட்டியபோது மர்மமாகப் புன்னகைத்தாள்.

**வி**ழுந்து விழுந்து படித்து, மாநிலத்திலேயே மூன்றாவது இடம் பிடித்து, நுழைவுத் தேர்வை நன்றாக எழுதி, மெரிட்டில் இன்ஜினியரிங் கல்லூரியில் சேர்ந்து, வங்கியில் கொடுத்த படிப்புக் கடன் உதவியுடன் மூன்றாம் ஆண்டு படிக்கும்போதே, பிரபல நிறுவனம் நடத்திய கேம்பஸ் இண்டர்வியூவில் தேர்வாகி, மீதிப் படிப்புச் செலவை அவர்கள் ஏற்றுக்கொண்டு, விடுமுறை நாட்களில் பயிற்சி கொடுத்து, படிப்பு முடிந்து ரிசல்ட்டுக்குக் கூட காத்திராமல் மைசூர் கிளையில் வேலையில் அமர்த்தி, எடுத்த எடுப்பில் முப்பதாயிரம் சம்பளம் போட்டவுடன், தலைகால் புரியவில்லை.

அபரிமிதமான சந்தோஷம். ரெக்கை கட்டிக்கொண்டு பறந்து வந்து, "ஜெயிச்சுட்டேன் ஜெகா... இதை... இதைத்தானே எதிர்பார்த்தே..." என்று மூச்சு வாங்க நின்றபோது,

"இதுதான் உங்க அம்மாவின் எதிர்பார்ப்பு" என்று சிரித்தாள்.

"ஆமாம் பாபு. நீ ஒரு கட்டத்துல படிக்க அடம்பிடிச்சே! அம்மா என்கிட்ட சொல்லிக் கவலைப்பட்டாங்க. 'நாங்க

நிலைமைல தாழ்ந்திருக்கோம்ங்கறதால, வசதியா இருக்கிற என் தம்பி எங்களை மதிக்கறதில்லை. பாபு ஒரு நல்ல நிலைக்கு வரணும். மதியாதவங்கள்லாம் வாசல் தேடி வந்து நிக்கணும். அவங்க முன்னால, நான் தலை நிமிர்ந்து பெருமையா நிக்கணும்னு கனவு கண்டுக்கிட்டிருக்கேன். இவன் அதுல மண்ணைப் போடப் பாக்குறான். உன்கூட பழகறானே... நீ சொன்னால் கேட்க மாட்டானா... எடுத்துச் சொல்லம்மா அவனுக்கு. அவன் உயர்வுல தான் இருக்கு... குடும்ப கௌரவம்'னு கையப் பிடிச்சிக்கிட்டு கேட்டாங்க. ஏதோ என்னாலான முயற்சியை செய்தேன். உன்னை உற்சாகப்படுத்தினேன்; ஊக்கப்படுத்தினேன். இயல்பாவே உன்னுள் இருந்த திறமையில் உயரத்துக்கு வந்துட்டே. இது ஒரு தாயின் கனவு...'' என்றவள்,

"ஒரு மகனுக்குத் தாயின் ஆசையை நிறைவேற்றுவதைவிட வேறு எதுவும் முக்கியமாயிருக்கக் கூடாது...'' என்று உபதேசித்து விலகினாள்.

அம்மா, தன் தம்பியின் மகள் கற்பகத்தைக் கல்யாணத்துக்கு முன்மொழிந்த போது, நான் ஜெகதாவைத்தான் கட்டுவது என்று உறுதியாக இருந்தபோது, அதற்கு எதிரியாய் இருந்தவளே ஜெகதாதான்.

"அய்ய... என்ன இது பச்சைப் புள்ளையாட்டம் அடம்பிடிச்சிக்கிட்டு. பழகினோம்ங்கறதுக்காக? கல்யாணம் கட்டிக்கிட்டே ஆகணுமா என்ன? இப்ப நீ எவ்வோ உயரத்துக்குப் போய்ட்டே. அதுக்கேத்தாப்ல அந்தஸ்தான இடத்துல பெண் கட்றதுதான் சரி. அப்பத்தான் கண்ணுக்கு லட்சணமா இருக்கும். அதை விட்டுட்டு, ஏழை சுப்புணி மகளைக் கட்டினா ஊர் சிரிக்கும். அப்புறம், உங்க அம்மா... காலமெல்லாம் என்னைப் போட்டு வறுத்தெடுப்பாங்க. அய்யோ... அந்த நரகம் எனக்கு வேணாம்பா...'' என்று ஒதுங்கி ஓடி ஒளிந்து, கண்ணாமூச்சு காட்டி, கடைசியில் கல்யாணத்தின் போது வந்து தலைகாட்டிப் போனாள்.

மனசெல்லாம் நிராசையோடு மைசூர் பயணம்...

நினைவில் சதா ஜெகதாவின் முகம்.

பாவிக்கு, காலாகாலத்தில் ஒரு கல்யாணம் நடந்து தொலைந்திருந்தால் கூட மனம் சமாதானமாகியிருக்குமோ என்னமோ...

'என் நினைவே போதுமாம்...'

எனக்கு மட்டும் கல்யாணம், வேறு வாழ்க்கை...

குற்ற உணர்வினால்தான் ஊர்ப் பக்கம் தலை காட்டுவதே இல்லை.

இன்னும் எத்தனை காலத்துக்கு அவள் நினைவு கொல்லாமல் கொல்லப் போகிறதோ என்ற வேதனை மனதை அரித்த போது, அம்மாவிடம், கற்பகம் சொல்லிக் கொண்டிருந்தாள்...

"நல்லாத்தான் பேசறாரு. நல்லாத்தான் நடத்தறாரு. கேட்டதெல்லாம் வாங்கித் தர்றாருன்னாலும், எப்பயும் எதையோ பறிகொடுத்தாப்லதான் நடந்துக்கறாரு...''

"போகப்போக எல்லாம் சரியாயிடும்'' என்றாள் அம்மா. ○

''எங்க பையன் தினமும் முட்டை வாங்கிட்டு வர்றான்!''

''எங்கேயோ தப்பு நடந்திருக்கு! வாரத்தில் இரண்டு நாட்கள்தானே முட்டை போடுறாங்க!''

– வே. முருகேசன்



13.8.06 முதல் 19.8.06 வரை

**மேஷம் :** குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பொருளாதார மேன்மை உண்டாகும். வீடு / வாகனம் வாங்க நல்ல தருணம். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் திருமணம் கைகூடும். கொடுக்கல் வாங்கலில் நற்பலனைத் தரும். கல்வி வளம் மேலோங்கும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். மனச்சலனம் தீரும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். வெளிநாட்டு அழைப்பு ஏற்படும். பணப் பெருக்கம் உண்டாகும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். அண்டை நாட்டுத் தொழில் நற்பலனைத் தரும். ஆஞ்சநேயர் கோயிலுக்கு சனிக்கிழமைதோறும் சென்று வர, நற்பலன் கிட்டும்.

**ரிஷபம் :** எண்ணங்கள் யாவும் ஈடேறும். வழக்கு வியாபாரம் வெற்றி கொள்ளும். சிறு தொல்லைகள் இருக்கும். உடல்நிலை சீராகும். பணக்கஷ்டம் தீரும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப்போவது நற்பலனைத் தரும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். தடைபட்டு வந்த காரியம் முடியும். நண்பர் / உறவினர் இடம் மாறுவார்கள். நெருங்கியவர்களை விட்டுப் பிரிய நேரிடும். மனம் லேசாகும். உத்தியோகத்தில் நெருக்கடிகள் இருக்கும். வியாபாரத்தில் சற்று முற்போக்கான சூழ்நிலை உருவாகும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**மிதுனம் :** நற்பலன் மிகுந்த வாரம். வாக்கு, தனம், கல்வி

# நடக்குமென்பார்; நடக்கும்!

குஞ்சை பரத்வாஜ்



மேலோங்கும். தன விருத்தி ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வேலையில் நற்பெயர் ஏற்படும். சிலருக்குப் புதிய பதவி வந்துசேரும். திருமண காரியம் கைகூடும். வீடு / மனை வாங்க உத்தமம். பணக் கஷ்டம் தீரும். தொழில் துறையில் மாற்றம் உண்டாகும். புதிய தொழில் நற்பலன் உண்டாகும். தாயின் உடல்நிலை சற்று பாதிக்கப்படலாம். அந்நிய நாடு செல்லும் வாய்ப்பு வந்துசேரும். வேலைப் பளு அதிகரிக்கும். சத்ரு தொல்லை விலகும். புதிய முயற்சி கைகூடும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு / கேது வழிபாடு செய்வது நற்பலனைத் தரும்.

**கடகம் :** மனக்குழப்பம் தீரும். பொருளாதார மேன்மை உண்டாகும். தெய்வ பலம் கிடைக்கும். வாக்கு வன்மை மேலோங்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். வேலைப்பளு

அதிகரிக்கும். மன இறுக்கம் விலகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை விலகும். எதிர்ப்புகள் மறையும். வழக்கு வியாஜ்யம் வெற்றி அளிக்கும். கல்வி வளம் மேலோங்கும். உடல் நலிவு விலகிச் செல்லும். திருமண காரியம் உண்டாகும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான் சந்திப்பு கிட்டும். எதிர்பாராத பயணம் உண்டாகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் உண்டாகும். புதிய பதவி கிடைக்கும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம் :** அனாவசியமான செலவுகள் நிறைந்து இருக்கும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். திருமணத் தடை விலகும். ஜாமீன் போடக் கூடாது. கூட்டாளிகள் விலகிப் போவார்கள். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வியாபாரம் சற்று மந்தமாக இருக்கும். நெருக்கமானவர்களிடம் மனஸ்தாபம் ஏற்படும். தொழில் ஸ்தானத்தில் நெருக்கடிகள் இருக்கும். விட்டுக் கொடுத்து நடந்துகொள்வது நல்லது. மறைமுக எதிரிகள் தொல்லை வரும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு நற்பலனை தரும்.

**கன்னி :** சுபகாரிய பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். பணக்கஷ்டம் இருக்காது. கணவன், மனைவி இல்லற வாழ்வில் அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. மனக்குழப்பம் தீரும். தூர தேச அழைப்பு கிட்டும். செலவுகள் அதிகம் இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் வழியில் திருமணம் கைகூடும். கல்வி வளம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். சத்ரு தொல்லை விலகும். வெளிநாட்டுத் தொழில் தேடுபவர்களுக்கு நற்பலனை அளிக்கும். ராகு / கேது வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

**துலாம் :** அற்புதமான வாரம். மன சந்தோஷம் கிட்டும். திருமண காரியம் நடைபெறும். உடல்நிலை நன்றாக இருக்கும். மனத்தில் தைரியம், தன்னம்பிக்கை மிகுதி ஆகும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். பணக் கஷ்டம் வராது. வீடு / மனை வாங்க நல்ல தருணம். வாகனம் வாங்க நல்ல காலம். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கொடுக்கல், வாங்கல் நற்பலனைத் தரும். மனப் பிரம்மை தீரும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் கிட்டும். கல்வி வளர்ச்சி காணும். மகான் சந்திப்பு கிட்டும். வழக்கு வியாஜ்யம் வெற்றி பெறும். எதிரிகள் சரண் அடைவார்கள். குரு / சனி வழிபாடு செய்துவர, நற்பலனை அடைவீர்கள்.

**விருச்சிகம் :** சந்தோஷமான வாரம். பூர்வீக சொத்துகள் பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய நண்பர் / உறவினர்கள் விலகிச் செல்வார்கள். பணக் கஷ்டம் விலகும். உடல்நிலை நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் சுப காரியம் கைகூடும். மண், மனை வாங்க நல்ல தருணம். தூர தேச அழைப்பு வந்து சேரும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். பிறந்த பூமியைவிட்டு தொலை தூரம் செல்ல நேரிடும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். பத்திரிகைகளில் பெயர் வரும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர நற்பலனைத் தரும்.

**தனுசு :** மன உலைச்சல் தீரும் வாரம். உடல் ஆரோக்கியம் சீராகும். குழந்தைகள் வழியில் சந்தோஷமான காரியம் கைகூடும். இடமாற்றம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணம் வந்துசேரும். வீடு / வாசல் வாங்க நல்ல தருணம்.

# பரத்வாஜ்...

**என் மகள் மன அழுத்தத்தால் மிகவும் அவதிப்படுகிறாள். அவள் குணமாகி, தன் கணவன், குழந்தையுடன் நல் வாழ்க்கை வாழ இயலுமா?**

**- வசந்தா நாராயணன், சென்னை**

உங்கள் மகளுக்கு கேது தசையில் திருமணம் நடைபெற்றுள்ளது. தற்பொழுது சுக்ரதசை சுக்ரபுத்தி 27.9.2006 வரை நடக்கும். நடந்து முடிந்த தசைகள் ஜாதகருக்கு அதிக அளவு மன உலைச்சலைக் கொடுத்திருக்கிறது. சரியான இல்லற வாழ்கை அளிக்கவில்லை. 27.9.2006க்குப் பிறகு வரும் சுக்ரதசை சூரிய புத்தியால் மன உலைச்சல் நீங்கும். இது கிரஹ திசையின் திருவிளையாடல். பொறுமை காக்கவும்.

உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் முன்னேற்றம் கிட்டும். செலவுகள் கட்டுங்கடங்கி இருக்கும். எதிர்ப்பு, தொல்லைகள் விலகும். வழக்கு வெற்றிகொள்ளும். நல்லவர் உதவி கிடைக்கும். கல்வியில் முன்னேற்றம் கிட்டும். எதிர்பார்த்த காரியம் கைகூடும். சனிக்கிழமை ஆஞ்சநேயரை வழிபட்டு வரவும்.

**மகரம் :** உற்சாகமான வாரம். கணவன், மனைவிக்குள் விட்டுக் கொடுத்து அனுசரித்து நடந்துகொள்வது நல்லது. ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். தெய்வ அனுகூலம் ஏற்படும். புண்ணியஸ்தலம் செல்ல நேரிடும். வீடு / வாகனம் வாங்க நல்ல காலம். வழக்கு வியாஜ்யம் வெற்றி அளிக்கும். சத்ரு தொல்லை விலகும். வேலையில் நற்பெயர் கிட்டும். இடமாற்றம் வரலாம். செலவுகள் சுபமானதாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி உண்டாகும். திருமண காரியம் கைகூடும். சனி / குரு வழிபாடு செய்வீக நற்பலனை அளிக்கும்.

**கும்பம் :** எதிர்ப்புகள் விலகும். நற்பலன் உண்டாகும் பணக்கஷ்டம் விலகும். கடன் தொல்லை நீங்கும். புதிய வேலைவாய்ப்பு வந்து சேரும். நண்பர்-உறவினர்களால் ஆதாயம் கிட்டும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். உடல்நிலையில் கவனம் தேவை. ஜாமீன் போடக்கூடாது. கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. வண்டி, வாகனத்தில் செல்லும்போது உஷார். கணவன், மனைவிக்குள் அனுசரித்துப் போவது நற்பலனைத் தரும். திருமணம் கைகூடும். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வீடு/ வாகனம் வாங்க நல்ல காலம். ராகு / கேது வழிபாடு செய்து வர, நற்பலன் தரும்.

**மீனம் :** சற்று மன உலைச்சல் ஏற்படும். எதிலும் கவனம் தேவை. கணவன், மனைவிக்குள் அனுசரணை தேவை. உடல்நிலையில் கவனம் தேவை. எதிர்ப்புகள் ஏற்படலாம். கூட்டாளிகளால் மனஸ்தாபம் ஏற்படும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார். வழக்கு இழுபறியாகச் செல்லும். உத்தியோகத்தில் நெருக்கடிகள் ஏற்படலாம். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். வியாபாரத்தில் சற்று மந்த நிலை இருக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். கல்வியில் அக்கறை செலுத்தவும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வர, சிரமங்கள் போய் நற்பலன் தரும். ●

# ...பதில்கள்

**ஜாதகத்துக்கு உரியவரின் பொருளாதாரம் பற்றிக் கூறுங்கள். அவருடைய பிள்ளைகளின் எதிர்காலம் எப்படியிருக்கும்?**

**- கி.சரவணகுமார், ஒ.மேட்டுப்பட்டி**

தற்பொழுது குரு தசை நடைபெற்று வருகிறது. குருபகவான் சுக்ரனுடன் சம்பந்தம் பெற்று விரைவில் ஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வதால், உடல்நலனில் உடனடியாக முன்னேற்றம் காண முடியாது. முருகப் பெருமானை வழிபட்டு வருதல் நலம் தரும். சஷ்டி கவசம் படித்து வருவது நற்பலனை அளிக்கும்.

## சிரிப்புச் சந்தை - 1

# புஷ்பப் பல்லக்கு!

## அமரர் கல்கி



மறுநாள் ஸ்ரீமதி தாசில்தாரிணி அவர்கள், தீராத்துயரமய்யங்காரையும், விகாரம் பிள்ளையையும் கூப்பிட்டனுப்பியபோது, அவர்கள் அஸ்தியில் சுரத்துடன்தான் போனார்கள். ஆனால் அம்மாள் வழக்கத்தைவிட அதிக முகமலர்ச்சியுடன் இருந்ததைக் கண்டதும் கொஞ்சம் மனம் தேறினார்கள்.

“அய்யங்காரே! நம்மாத்திலே கல்யாணம் வந்திருக்கு” என்றாள் அம்மாள்.

இவர்களுக்கு ஒன்றும் புரியாவிட்டாலும் “சந்தோஷம்” என்றார்கள்.

“ஆனால் கொஞ்சம் தர்மசங்கடமாய்ப் போய் விட்டது. இருந்தாலும் நீங்கள் எல்லோரும் இருக்கிறீர்களே? பார்த்துக் கொள்கிறீர்கள்.”

“அதற்கென்ன சந்தேகம்? பேஷா பார்த்துக் கொள்கிறோம்” என்றார்கள். எதைப் பார்த்துக்கொள்வது என்று மட்டும் அவர்களுக்கு விளங்கவில்லை.



“செல்லக்கிளியைப் பெரிய இடத்தில் கொடுத்திருக்கு. உங்களுக்குத்தான் தெரியுமே, சம்பந்தி சப் ஜட்ஜ். ஒருவேளை அவர்கள் வந்தாலும் வருவார்கள். கல்யாணம் ஜெரப்பா நடத்த வேண்டும்.”

இப்பொழுது கொஞ்சம் விளங்க ஆரம்பித்தது. ஆனால் இவர்களுடைய ஆச்சரியமும் திகைப்பும் அதிகமாயின. இந்த ஸ்திரீயின் துணிச்சல்தான் என்ன? காம்ப்புக்கு வந்த இடத்தில் தங்கைக்கு ருது ஸ்நானக் கல்யாணம் நடத்த வேண்டுமென்று சொல்கிறாளே?

இந்தச் சமயத்தில் தாசில்தார் உள்ளே வந்தார். “என்ன, ஆர்.ஐ. (ரெவின்யூ இன்ஸ்பெக்டர்)! சமாசாரம் கேட்டீர்களல்லவா? எக்கச்சக்கமாய் வந்து கல்யாணம் ஏற்பட்டிருக்கிறதே? இரண்டு வண்டி வைத்து இவர்களை ஊருக்கு அனுப்பி விடலாமென்று தோன்றுகிறது; நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?”

“அவர்கள் நினைக்கிறது என்ன? அதெல்லாம் பேஷாய் ‘நாங்கள் இருக்கிறோம், பார்த்துக் கொள்கிறோம்’ என்று சொல்லிவிட்டார்கள். இனி மேல் கிளம்பி ஊருக்குப் போய் எல்லா ஏற்பாடுகளும் பண்ணுகிறதென்றால் முடியுமா? நீங்களும் காம்ப்பிவிருந்து வர முடியாது. நான் தனியாய் ஒண்டிக்காரி என்ன செய்வது? என்ன, விகாரம்பிள்ளை, என்ன சொல்கிறீர்கள்?”

“அம்மா சொல்கிறதும் வாஸ்தவந்தானே?” என்றார் விவகாரம் பிள்ளை.

தாசில்தார், ரிவின்யூ இன்ஸ்

## சிரிப்புச் சந்தை - 1

பெக்டர் முகத்தைப் பார்த்தார்.

"எல்லாம் இங்கேயே பேஷாய் நடத்தி விடலாம்னா!" என்றார் ஆர்.ஐ. அய்யங்கார்.

சற்று நேரத்துக்கெல்லாம் அங்கே கூடியிருந்த கிராம முனிசிப், கணக்கப் பிள்ளைகள் எல்லாரும் மேளக்காரன், பூக்காரன் முதலியவர்களைத் தேடிச் சென்றார்கள்.



அன்றிரவு கணக்கப் பிள்ளை ராயர் தமது மனைவியிடம் பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந்தார்: "நீங்களும் பதினெட்டு முழம் புடைவை கட்டிக் கொண்டு பொம்மனாட்டிகள் என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே! தாசில்தார் சம்சாரம் வந்திருக்கிறாள். என்ன சாமர்த்தியம்! என்ன சாமர்த்தியம்! அவளுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இன்றைக்குக் குஞ்சாலாடு பிடிப்பதற்கான சாமான் வேண்டியிருந்தது. பரிசாரகன் பாட்டுக்குக் கண்ணை மூடிக் கொண்டு ஜாபிதா போட்டிருந்தான். 'ஏண்டா, முந்நூறு குஞ்சாலாடுக்கு மூன்றே முக்கால் வீசை சர்க்கரைதானே, திட்டம்? எப்படி நாலு வீசை போட்டிருக்கிறாய்?' என்று தாசில்தார் சம்சாரம் கேட்டாள். பரிசாரகன் விழித்துப் போய் விட்டான். பொம்மனாட்டி என்றால் அப்படியல்லவா நாலும் தெரிந்திருக்க வேண்டும்?

"இவ்வளவு தெரிந்தவள் என்கிறீர்களே! நம்பாத்திலும் இரண்டு குழந்தைகள் இருக்கே! 'ராயரே, இந்தாரும் இரண்டு குஞ்சாலாடு. எடுத்துக் கொண்டு போய்க் குழந்தைகளிடம் கொடும்' என்று சொல்லத் தெரிந்ததா? என்னமோ காணாதது கண்டதுபோல் ஆகாசத்தில் தூக்கி வைக்கிறீர்களே?" என்றாள் ராயர் மனைவி.

ராயருக்கும் இந்த விஷயத்தில் கொஞ்சம் தாசில்தார் மனைவி மேல் தாங்கல் இருந்தது. அந்த அம்மாள் அந்தண்டை,



மோட்டார் கிடைக்காது என்று தெரிந்தபோது தாசில்தாரிணிக்கு ஏற்பட்ட ஏமாற்றத்துக்கு அளவில்லை. "இது தெரிந்திருந்தால் டவுனுக்கே போயிருக்கலாமே?'' என்று கூடச் சொன்னாள். முயற்சியில் ஒன்றும் குறைவில்லை. சுற்றுப்பக்கம் பத்து மைல் தூரத்தில் உள்ள பெரிய மிராசுதாரர்களின் மோட்டார்களுக்கெல்லாம் ஆள் விடப்பட்டது. இவர்களெல்லாம், நெல் கலம் கால் ரூபாய் விற்றபோது மோட்டார் வாங்கினார்கள். இப்போது அவை கொட்டகைகளில் தூங்கின. ஒன்றுக்கு டயர் இல்லை. ஒன்றுக்கு கியர் இல்லை. மற்றொன்றின் எஞ்சின் பழுது. எல்லாம் சரியாயிருந்தாலும் டிரைவர் கிடையாது. இப்படியாக மோட்டார் இல்லையென்று தீர்ந்துபோன பிறகு, ஒருவர் "பழைய நாளைப் போல் புஷ்பப் பல்லக்கு வைத்தால் என்ன?'' என்று கேட்டார். "பேஷ்! சரியான யோசனை!'' என்றாள் அம்மாள். உடனே, வீராசாமி நாயுடுக்கு ஆள் விட்டார்கள். நாயுடு வந்து அச்சாரம் வாங்கிக் கொண்டு சென்றார்.

புதன்கிழமை ஸ்நானம், ஊர்வலம் எல்லாம் நடைபெற வேண்டும். கிராம வாசிகள் எல்லோரும் இந்த வைபவத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். புஷ்பப் பல்லக்குக் காட்சி அவர்கள் பார்த்து இன்றைக்குப் பதினைந்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டது. வீராசாமி நாயுடுவின் உற்சாகத்தையோ சொல்ல வேண்டிய தில்லை. புஷ்பத்துக்கு அவன் அச்சாரம் கொடுத்து வேண்டிய ஏற்பாடுகள்

இந்தண்டை போனால் மெதுவாக ஒரு குஞ்சாலாடு சாப்பிட்டு விடலாமென்று அவர் சமையலறைப் பக்கம் அடிக்கடி போய்க் கொண்டிருந்தார். ஆனால், அது பலிக்கவில்லை. குஞ்சாலாடு பூராவும் பிடித்துக் கூடையில் அடுக்கிச் சாமான் அறையில் வைத்துப் பூட்டிய பிறகு தான் அம்மாள் நகர்ந்தாள்.

ஆயினும் அதுகூட ராயருக்கு அந்த அம்மாளிடம் ஒரு விதத்தில் பக்தி விசுவாசத்தையே உண்டாக்கிற்று. "நம்ப வீட்டுப் பசங்களாயிருந்தால், எங்கேயாவது போய், யார் வாயையாவது பார்த்துக் கொண்டு நிற்கும். வந்தவர்கள், போனவர்கள் எல்லோரும் தலைக்கு ஒன்று எடுத்துக் கொண்டு போவார்கள். இந்த அம்மாளிடம் நடக்குமா, அது?'' என்று எண்ணி வியந்தார்.

**ஸ்**நான தினத்தன்று ஊர்வலம் நடத்த வேண்டிய விஷயமாக யோசிப்பதற்கு ஓர் ஆலோசனை சபை கூடிற்று.

செய்து விட்டான். ஆகவே, செவ்வாய்க் கிழமை இரவு திண்ணையில் படுத்துக் கொண்டு அவன் மானஸீகமாய்ப் புஷ்பப் பல்லக்கு ஜோடித்துக் கொண்டிருக்கும்போது, திடீரென்று கிராம முனிசீப் கிண்டாமணி முதலியார் வந்து, "ஓய், வீராசாமி நாயுடு! பல்லக்கும் வேண்டாம்; பாடையும் வேண்டாம்" என்று சொன்னதும், நாயுடுவுக்கு எவ்வளவு ஏமாற்றம் ஏற்பட்டிருக்குமென்று நீங்களே யோசியுங்கள்.

மறுநாள் அதிகாலையில் தாசில்தார் தமது பரிவார தேவதைகள் சமேதராய் வில்வண்டிகளில் பிரயாணமானார். ஊரார் எல்லோரும் வியப்பும் ஏமாற்றமும் அடைந்தார்கள். விசாரித்ததில் விஷயம் பின்வருமாறு என்று தெரிய வந்தது :-

ஜில்லா கலெக்டர் பல்டன் துரை அணைக்கட்டைப் பார்வையிடுவதற்காக வருவதாக



வும், வழியில் கோவிந்தகுடி முஸாபரி பங்களாவில் புதன்கிழமை மத்தியானம் ஜாகை போடுவாரென்றும், முதல்நாள் சாயங்காலம் செய்தி வந்ததாம். ஆகவே, தாசில்தாரிணி தன்னுடைய உத்தேசத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. சௌபாக்கியவதி செல்லக்கிளியின் ஜாதகத்தில் புஷ்பப் பல்லக்கு ஊர்வலம் செல்லும் பாக்கியம் விதிக்கப்பட்டிருக்கவில்லை.

புதன்கிழமை அதிகாலையில் தாசில்தாரையும், அவருடைய பரிவாரங்களையும் மூட்டை கட்டி அனுப்பியதும், ரெவின்யூ இன்ஸ்பெக்டர் ஏதோ கணக்கை வைத்துக்கொண்டு உட்கார்ந்து ரூபாய், அணா பைசாக்களுடன் மல்லுக் கொடுத்துக் கொண்டிருந்தார். இதற்குக் காரணம், லஞ்ச நாத சாஸ்திரியார் தம்முடைய காம்ப்புக்காக மொத்தம் கிராம அதிகாரிகளிடமிருந்து வசூலான தொகை, செலவான தொகை இவற்றுக்குக் கணக்கும், பாக்கித் தொகையும் தம்மிடம் அடுத்த காம்ப்பில் கொண்டு வந்து ஒப்புவிக்க வேண்டுமென்று அவருக்குக் கட்டளையிட்டிருந்ததுதான். மிச்சப் பணத்திலிருந்து ஒரு நிலைக்கண்ணாடி, ஒரு ஷேவிங் செட், ஒரு செண்ட் பாட்டில், இரண்டு பவுண்ட் சாக்லேட், ஒரு செட் பிரெஞ்சுப் படுக்கையறைப் படங்கள் வாங்கிக் கொண்டு வரவேண்டுமென்று தாசில்தார் சொல்லியிருந்தார்.

உபயவே தீராத்துயரமய்யங்கார் இவ்வாறு கணக்குப் போட்டுக் கொண்டிருக்கையில் கர்ணங்களும், கிராம முனிசீப்புகளும் மூலைக்கொருவராய் ஓடிக் கொண்டிருந்தார்கள். இந்தத் தடவை அவர்கள் பெரிய கலெக்டர் பல்டன் துரையின் திருக்குஷ்டியை நிரப்புவதற்காகக் கோழி முட்டைகளையும், குள்ள வாத்துகளையும் தேடிச் சென்றார்கள். அவர்களுடைய அவசரத்தில், அன்னங்களைக் கூட வாத்துக்கள் என்று அவர்கள் நினைத்து விடக் கூடுமாதலால், நேயர்களே! சீக்கிரம் எங்கேயாவது ஓடி ஒளிந்து கொள்ளுங்கள்.

(அடுத்த இதழில்... கவர்னம் விஜயம்!)

"ஜன்னல் பக்கத்துல எதுக்கு நோட்டு, பென்சில் எல்லாம் வெச்சிருக்கே?"

"நான் வீட்ல இல்லாதப்போ வேலைக்காரி வந்தா, பக்கத்து வீட்டுச் செய்திகளை எல்லாம் இதுல எழுதி வெச்சுட்டுப் போயிடுவா!"

- அதிரை புகாரி

# எல்லோரிடமும் அன்பு!

தன் வேலையை இன்னொருத்தனிடம் விட்டுவிட்டு, தான் 'ஊரானுக்குத் தொண்டு செய்கிறேன்' என்று போனால் அது பரிஹாஸந்தான், மோசடிதான்.

தாயார், தகப்பனார், ஸஹோதரர், பத்னி புத்ரர் இருந்தால் அவர்கள் ஆகியவர்களுக்குச் செய்ய வேண்டிய ட்யூட்டிகளைச் செய்யாமல், லோகத்துக்கு உபகாரம் செய்கிறேன் என்றால் அது 'ஹிபாக்ரிஸி' (போலி வேஷம்) தான். இப்படியெல்லாம் பண்ணி வீட்டு மநுஷ்யாள் எடுத்துக்காட்டினால் கோபம் வருகிறது, எரிச்சல் வருகிறது என்றால், பரோபகாரத்தால் இவனுக்கு எந்த அபிவிருத்தியும் ஏற்படவில்லை என்றுதான் அர்த்தம். 'எல்லாரிடமும் அன்பாயிருக்கணும், மதுரமாய்ப் பழகணும்' என்பதுதான் தொண்டு செய்கிறவனுக்கு லக்ஷணம். பொதுத்தொண்டு என்பதற்காகவே வீட்டு மநுஷ்யர்களிடம் அன்பு போய், எரிந்து விழுந்து கொண்டிருக்கிறானென்றால் இவன் தொண்டு செய்து என்ன புண்யம்? இவனுக்கு என்ன சித்த சுத்தி ஏற்பட முடியும்? குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்கிற மாதிரி பண்ணிக்கொள்ளக் கூடாது.

தன் லிமிடேஷனை எவனும் எப்போதும் உணர வேண்டும். மநுஷ்யராய்ப் பிறந்துவிட்டோம். அதனால் நாம் பல திநுஸில் கட்டுப் பட்டுத்தான் கிடக்கிறோம். ஆசைகள், ஆஸ்தைகள் பெரிசாய் இருக்கலாம். அவை நல்லதாகவும் இருக்கலாம். லோகத்துக்கு நல்லது பண்ணணும் என்றே ஆர்வமிருந்தாலும் நமக்கும், நம் குடும்பத்துக்கும் செய்தேயாக வேண்டும் என்ற நிர்பந்தம் இருப்பதை உணர்ந்து இந்த ட்யூட்டிக்கு ஹானியில்லாமல்தான் லோக ஸேவை செய்ய வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



"குளிக்கப் போய் சேற்றைப் பூசிக் கொள்ளாதே!"

நாம் வாழும் வீடு மரக் கதவுகளால் மூடப்பட்டிருக்கிறது. நமது வாழ்க்கையோ கண்ணாடிக் கதவுகளால் மூடப்பட்டிருக்கிறது. தன்முன் நிற்பவரைப் பிரதிபலிப்பதுதான் கண்ணாடியின் இயல்பு.

கண்ணாடிக் கதவின் முன் நின்று அடுத்தவரின் வாழ்க்கையைப் பார்க்க முயல்கையில், அது நமது வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது. அந்த பிம்பம்தான் 'நமது வாழ்க்கையும் அடுத்தவர் வாழ்க்கையும் ஒன்றே' என்று நம்ப வைக்கிறது.

ஒரே பகுதியில் வாழ்ந்து வருகிற ராதா, சீதா, கவிதா, கல்பனா ஆகிய நான்கு பெண்கள் தோழிகளானதும் அந்தப் பிம்பம் கொடுத்த நம்பிக்கையில்தான்.

ஆனால் பிம்பத்தை நம்பாமல் கண்ணாடிக் கதவுகளைத் திறந்து பார்த்தால் ஒவ்வொருவர் வாழ்க்கையும் ஒன்றல்ல... வெவ்வேறானவை என்று புரிகிறது.

ராதாவுக்குச் சொந்தம் என்று சொல்லிக்கொள்ள யாரும் கிடையாது. தருகிறாள் ராதா.

அதுவரையிலும் ராதாவுக்குக் கடவுளாக இருந்த பாமா, சாத்தானாக மாறிவிடுகிறாள். ராதாவுக்குச் செய்த உதவிகளுக்கெல்லாம் பிரதிபலனாக ஷியாமை வளைத்துப் போடுகிறாள்.

ராதாவின் வாழ்க்கையைப் பறிக்கத் துடிக்கும் பாமாவின் திட்டம் நிறைவேறியதா? பாமாவும் ஷியாமும் சேர்ந்து செய்கிற துரோகத்தை ராதா உணர்ந்து கொண்டாளா?

சீதாவும் சந்திரசேகரும் அந்நியோன்யமான தம்பதிகள். சீதா ஒரு டாக்டர், சந்திரசேகர் ஒரு கார்ட்டூனிஸ்ட். இவர்களுக்கு கார்த்திக் என்று ஒரே ஒரு மகன். அவன் அவர்களது சொந்தப் பிள்ளை இல்லையென்பது சீதா, சந்திரசேகர் ஆகிய இருவரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

இந்த நிலையில்தான் திருமணமாகிப் பல வருடங்கள் கழித்து சீதா கருவுறுகிறாள்.

# கடவுளிலிருந்து

சிறுவயதில் அவளுக்காக ஹாஸ்டல் ஃபீஸ், எக்ஸாம் ஃபீஸ் கட்டி, புத்தகங்கள் வாங்கிக் கொடுத்துப் படிக்க வைத்தவள் பாமா.

ஷியாம், ராதாவின் கணவன். கணவனே அவளின் கண்கண்ட தெய்வம். முன் கோபம் காரணமாக எந்த வேலையிலும் அதிகபட்சம் ஒரு நாள்கூட தங்காத ஷியாமுக்கு, தனது தோழி பாமாவின் அலுவலகத்திலேயே வேலை வாங்கித்



குட்டிப் பாப்பா பிறந்தால் தன்மீது செல்லம் குறைந்துவிடும் என்று பெற்றோரிடம் மிகக் கடுமையாக நடந்து கொள்கிறான் கார்த்திக். கார்த்திக்கை இழக்க விரும்பாத சீதா, தனது கருவையே கலைத்துக் கொள்கிறாள். பலவீனமான அவளது கர்ப்பப்பையும் அகற்றப்படுகிறது. இந்தச் சமயத்தில் கார்த்திக்கின் சொந்த அம்மா அஸ்வினி திடீரென வந்து நிற்கிறாள். அஸ்வினி எதற்காக கார்த்திக்கைத் தேடி வந்தாள்?

கவிதா மிக புத்திசாலியான பெண். தனது திறமையாலும் அறிவுக் கூர்மையாலும் படுவேகமாக உயர்ந்தவள். அவளுடைய வளர்ச்சியை பக்கத்திலிருந்து பார்த்துப் புழுங்கினான்

அருண். காதல் என்ற சென்டிமெண்ட் வலையில் அவளைச் சிக்க வைக்கிறான்.

அவளையே திருமணம் செய்து கொண்டு நான்கு குழந்தைகளுக்குத் தாயாக்கி வீட்டுக்குள்ளேயே முடக்கி விடுகிறான்.

அருண் வேலை செய்யும் நிறுவனத்துக்காக கவிதா கொடுத்த ஐடியா நன்கு ஹிட்டாகிறது. கவிதாவின் ஜி.எம்., கவிதாவுக்கும் அவளது குடும்பத்துக்கும் பீச் ரிசார்ட்டில் பார்ட்டி தருகிறான்.

பார்ட்டியில் கவிதாவுக்கு மிகப்பெரிய அதிர்ச்சி காத்திருக்கிறது. அது என்ன? பார்ட்டியின் போதும் அவமானப்படும் அருண், அதிரடியாக ஒரு முடிவை எடுக்கிறான். அந்த முடிவுதான் என்ன?

கச்சிதம் என்ற வார்த்தைக்கு அடையாளம் கல்பனா. நேரெதிர் துருவமாக கணவன் மாதவன். எதிலும் நேர்த்தியையும் ஒழுங்கையும் எதிர்பார்க்கும் கல்பனாவுக்கு அதன் பக்கவிளைவாக, சந்தேக புத்தி வந்து விடுகிறது.

# சாதித்தாளுக்கு...

இதற்கிடையே மாதவனின் வாழ்க்கையில் மர்மமாக மற்றொரு பெண் வந்து போவதை உணர்கிறாள் கல்பனா. கல்பனாவால் அவளைக் கண்டுபிடிக்க முடிந்ததா?

இந்த நான்கு பெண்களும் வசிக்கும் அதே பகுதியில் தயாளன் குடும்பமும் வசிக்கிறது. அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த அன்புவும் யாமினி என்ற பெண்ணும் காதலிக்கிறார்கள். அந்தக் காதலை எதிர்க்கும் தயாளன், அன்புவுக்கும் அவனது முறைப் பெண்ணுக்கும் திருமணம் செய்து வைக்க முயற்சி செய்கிறார்.

அவர்களுடைய நிச்சயதார்த்தத்தின் போது திடீரென்று அன்பு காணாமல் போகிறான். போலீஸ் விசாரணையின் முடிவில் அவன் தற்கொலை செய்து கொண்டான் என்று தெரிகிறது. ஆனால் யாமினிதான் அவனது மரணத்துக்குக் காரணமென்று யாருக்கும் தெரியாது. தயாளன் குடும்பத்தை பழிவாங்கத் துடிக்கிறாள் யாமினி. தயாளன் குடும்பத்தின் மேல் யாமினிக்கு என்ன பகை?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் இந்த வாரக் கண்ணாடி கதவுகளில் பதில் தெரிய வரும்.



'கண்ணாடி கதவுகள்' தொடரை விஜய் டி.வியில் பார்த்துவிட்டுத் தகுந்த விமர்சனங்களை எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அதிர்ஷ்டசாலி நேயருக்குத் தங்க நாணயம் பரிசாகக் காத்திருக்கிறது! கல்கியில் வெளியாகும் கூப்பனை விமர்சனக் கடிதத்துடன் இணைத்து அனுப்புங்கள்.

கண்ணாடி கதவுகள்,
விஜய் டி.வி,
அஞ்சல் பெட்டி எண்: 8484,
சென்னை - 600 034

# இணையம்

இன்று உலகம் எவ்வளவோ மாறிவிட்டது. அனைவரும் அனைத்திலும் புதுமையை நேசிக்கத் தொடங்கிவிட்டனர். ஆனால் புதுமைக்கு ஆதாரமான பழமையை நினைக்க மறந்துவிட்டனர். அதில் முக்கியப் பங்கு வகிப்பது நமது இலக்கியம்தான். உண்மையில் இலக்கியம் என்பது ஒரு பெரிய, அரிய சொத்து. அதனைத் தெரிந்து கொள்கின்ற ஆர்வம் யாருக்கும் இல்லை. முன்பெல்லாம் இலக்கியத்தைப் பாதுகாக்கவும், வளர்க்கவும் பல இயக்கங்கள் இயங்கி வந்தன. ஆனால் மக்களின் ஒத்துழைப்பில்லாததால் அப்பணியைத் தொடர்ந்து செய்ய அவர்களால் இயலவில்லை. ஏனென்றால் இலக்கியப் புத்தகங்களை வாங்கிப் படித்து, புரிந்துகொள்ளும் அளவுக்கு யாருக்கும் பொறுமை கிடையாது. அதனால் பலரும் இலக்கியத்தை ருசிக்க மறந்துவிட்டனர். சுவடிகளிலும், புத்தகங்களிலும் இலக்கியத்தைப் பாதுகாப்பதென்பது முடியாத காரியம். எங்கே இந்நிலை தொடர்ந்தால் நமக்குப் பின்வரும் தலைமுறையினருக்கு இலக்கியத்தைப் பற்றித் தெரிய வருமோ என்ற கவலையும் எதிர்பார்ப்பும் இருந்தது.

ஆனால் இன்று அந்தக் கவலை இல்லை. இணையதளங்கள் இலக்கியங்களைத் தன்னுள் அடக்கிப் பாதுகாத்து, வளர்த்து வருகின்றன. இணையம் உலகளாவியது. அதனுள் சேகரிக்கப்படும் விஷயங்கள் என்றும் அழியாத்தன்மை கொண்டவை. இதனால் நமக்குப் பெரிய பலன்கள் உள்ளன. எத்தனை புத்தகங்களைக் காசு கொடுத்து வாங்க முடியும்?



ஆனால் இருந்த இடத்திலிருந்து இணையதளங்களின் உதவியோடு பல இலக்கியங்களை எளிதில் நம்மால் அறிய முடிகிறது. நம்முடைய படைப்புகளையும் ப்ளாக்ஸ் எனப்படும் வலைப்பூக்களின் மூலம் மற்றவர்களுக்குத் தெரியச் செய்யலாம். இதனால் நம்முடைய கருத்தை அவர்களும் அவர்களுடைய கருத்தை நாமும் எளிதில் பகிர்ந்துகொள்ள முடிகிறது. இலக்கியத்தோடு மட்டும் நின்றுவிடாமல் அதனுள் இருக்கும் முழு விவரங்களையும் நம்மால் தெரிந்துகொள்ள முடிகிறது. சொல்லப்போனால் இணைய தளங்கள் மூலம்

# இலக்கியம் வளர்க்கிறதா?

இலக்கியம் மிக எளிதில் அனைவரையும் சென்றடைகிறது. என்றாலும் ஒரு சில இணையங்களில் இலக்கியம் என்ற பெயரில் ஆபாசமான கவிதை, கதை, கட்டுரைகளைச் சேர்ப்பது மிகவும் கண்டிக்கத்தக்கது. எவ்வளவு பெரிய கண்டுபிடிப்பாக இருந்தாலும் அவை நன்மைக்கென்று பயன்படும்போதுதானே மதிப்பு!

தொகுப்பு : **விமலன்**
படம் : **ஸ்ரீஹரி**



"கபாலி திருடக் கிளம்பும்போது எதிரே போயிருக்கக் கூடாது!"

"ஏன்?"

"அபசகுனம்னு திட்டிக்கிட்டே மறுபடி வீட்டுக்குள்ள போய்ட்டான்!"

- அம்பை தேவா

---

"நியூமராலஜிப்படி தன் பெயரைத் தலைவர் மாத்திக்கிட்டதுக்காக அவரை அரஸ்ட் செஞ்சாங்களா, ஏன்?"

"தணிகாசலம்ங்கற பேரை தணிகாச்சலாம்னு மாத்திக்கிட்டாராம்!"

- கே.ராஜகோபால்



# 19

'உன்னை நேசிப்பது போலவே, அடுத்த வீட்டுக்காரரிடமும் அன்பு செலுத்த வேண்டும்' என்று அம்மா சொல்வதால் மட்டுமே யாரும் அடுத்தவர்களிடம் அன்பு காட்டத் தயாராகிவிட மாட்டார்கள். வாழ்க்கையில் தவறுகள் செய்யாமல், நேர்மையுடன் வாழ வேண்டும் என்று சொல்லுவதாலேயே யாரும் திருந்திவிட மாட்டார்கள். ஏன் அன்பு செலுத்த வேண்டும்? ஏன் திருந்தி வாழ வேண்டும்? என்கிற தத்துவங்களுக்குப் பின்னால் இருக்கும் உண்மைகளையும் அவர்களுக்குப் புரியும்படி எடுத்துச் சொல்ல வேண்டும்.

பக்கத்து வீட்டுக்காரர் நல்ல மனிதராக இருக்க வேண்டும் என்று இறைவனிடம் பிரார்த்தனை செய்யுங்கள் என்று சொன்னால், 'பக்கத்து வீட்டுக்காரன் எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டுமே! அவனைப் பற்றி நாம் எதற்காகக் கவலைப்பட வேண்டும்?' என்கிற எண்ணம்தான் பொதுவாக ஒருவருக்குத் தோன்றும். அதையே இப்படி யோசித்துப் பாருங்கள். பக்கத்து வீட்டில் வசிப்பவர் ஒரு திருடன் என்றால், நாம் நிம்மதியாக நம் வீட்டில் வசிக்க முடியுமா? வீட்டைப் பூட்டிவிட்டு வெளியில் சென்றாலும், பக்கத்து வீட்டுக்காரன், பூட்டை உடைத்து வீட்டுக்குள் புகுந்து எதையாவது திருடிச் சென்றிருப்பானோ என்ற எண்ணம்தானே இருக்கும்! நம் வாழ்வில் நிம்மதி இருக்குமா? மாறாக அவன் திருந்திய நல்ல மனிதனாக இருந்தால், நமக்கு எவ்வளவு நிம்மதியாக இருக்கும்! ஆகவே, பிறருக்காக நாம் பிரார்த்தனை செய்தாலும்கூட அதனால் நமக்கு நன்மைதான் கிடைக்கும்.



ஆனால், அடுத்த வீட்டுக்காரருக்காக பிரார்த்தனை செய்யும் மனப்பக்குவம் இன்று நம்மில் எத்தனை பேருக்கு இருக்கிறது? அவர்கள் மீது நமக்கு வெறுப்புதானே அதிகமாக உள்ளது. அவர்களது உயர்வைக் காணும்போது, நமக்குக் கோபமும், பொறாமையும்தானே ஏற்படுகிறது. அதனால் நமது மனதில் இருள்தான் நிறைகிறது.

நாம் விஷம் சாப்பிட்டால் நாம்தானே மரணத்தைச் சந்திக்க வேண்டும்? நமது உடம்பு எண்ணற்ற செல்களால் ஆனது. கோபத்தாலும், பொறாமையாலும் நம்முடைய ஒவ்வொரு செல்லும் இறந்து கொண்டிருக்கிறது; நாம் நாசமடைகிறோம். பிறர் மீது கொண்டுள்ள கோபத்தை வளர்ப்பது என்பது தற்கொலை செய்துகொள்வதற்குச் சமம். அதே சமயம், பிறர் மீது அன்பு செலுத்தும்போது, நமது மனம் தூய்மையடைகிறது. மனம் தூய்மை பெறும்போது, நற்குணங்களும், ஆனந்தமும் அதில் தானாகவே ஒளிரும்.

ஆனந்தம் நமக்கு வெளியிலிருந்து கிடைப்பதில்லை. சிலருக்குச் சாக்லெட் என்றால் ரொம்பவும் பிடிக்கும். ஆனால்,



தொடர்ந்து பத்து சாக்லெட்டுகளைத் தின்றால், அது எவ்வளவுதான் இனிப்பாக இருந்தாலும் திகட்டிப் போய்விடுமல்லவா? பதினொன்றாவது சாக்லெட்டை வாயில் போட்டுக் கொள்ளும் போது, முதல் சாக்லெட்டைத் தின்றபோது கிடைத்த இன்பம் இருக்காது.

அதேபோல சாக்லெட்டை விரும்பாத சிலரும் உண்டு. அவர்களுக்கு, அதன் மணத்தை நுகர்ந்தாலே வாந்தி வருவது போல இருக்கும். உண்மையில் சாக்லேட் ஒன்றுதான். சாக்லெட் என்பது இன்பம் தருவது என்றால், அது அனைவருக்கும்தானே தர வேண்டும். ஏன் ஒரு சிலருக்குத் தருவதில்லை? ஏன் சிலதைத் தின்றவுடனேயே திகட்டிவிடுகிறது? ஏனென்று புரிகிறதா? இன்பம் என்பது சாக்லெட்டில் இல்லை. அது மனதை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

**நா**ம் உலகப் பொருட்களிலிருந்து ஆனந்தம் கிடைக்கிறது என்று கருதுவோம். வாழ்க்கை முழுவதையும் அதற்காகச் செலவிடுவோம். கடைசி காலத்தில் சோர்ந்துபோய் விடுவோம். அப்போது ஆனந்தம் வெளியில் எங்குமில்லை என்று நம் மனதுக்குப் புரியும்.

கையில் காயம் பட்டால், உட்கார்ந்து அழுவதால் என்ன பயன்? காயத்துக்கு மருந்து போடுவதற்கு என்ன வழி என்றுதானே பார்க்க வேண்டும். மருந்து போடாமல், "ஐயோ! காயம் பட்டுவிட்டதே!" என்று அழுது கொண்டிருந்தால், சீழ் பிடிக்கும்; காயம் பெரிதாகும்; வலி அதிகமாகும்.

ஒரு மனிதனைப் பாம்பு கடித்து விட்டது. அவனுக்குப்

# பிறருக்காகவும் பிரார்த்தனை செய்!

## மாதா அமிர்தானந்தமயி

# அம்மா!

அம்மா வழக்கமாக தூய வெள்ளை உடையில் பக்தர்களுக்குத் தரிசனம் அளித்தாலும், அவ்வப்போது தலையில் க்ரீடம், கழுத்தில் மாலை போன்றவற்றுடன் தேவியைப் போல தரிசனம் அளிப்பதும் வழக்கம். இதற்கு தேவிபாவ தரிசனம் என்று பெயர். பல பக்தர்கள் அம்மாவை இந்தக் கோலத்தில் தரிசனம் செய்து பெரும் மகிழ்ச்சியடைவதுண்டு என்றாலும், சிலர் அம்மாவிடம், "நீங்கள் ஏன் தேவியைப் போல உங்களை அலங்கரித்துக் கொள்கிறீர்கள்?" என்று கேட்பது உண்டு. அதற்கு அம்மா அளிக்கும் விளக்கம் இதுதான்: ஒவ்வோர் உடையும் அதற்குரிய முக்கியத்துவம் வாய்ந்ததாகும். நாம் பிறக்கும்போது ஆடையின்றிப் பிறந்தாலும், பின்னர் நாம் வாழும் நாடு, அங்கு நிலவும் கலாசாரம், பழக்க வழக்கம் ஆகியவற்றுக்கு ஏற்ப உடை அணிகிறோம். ஒருவன் என்ன உடை அணிந்திருந்தாலும், அவன் மனிதனே! இக்காலத்தில் மக்கள் உடைக்கு மிகவும் மதிப்பு அளிக்கிறார்கள்.

ஒருவன் சாலை ஓரத்திலிருந்த ஒரு மரத்தை வெட்டிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த ஒருவன், அவனிடம் சென்று, "மரத்தை வெட்டாதே! நீ செய்யும் காரியம் சட்டப்படி தவறு. அதற்குத் தண்டனை உண்டு" என்றான். மரத்தை வெட்டிக் கொண்டிருந்தவன் அதனைச் சட்டை செய்யாமல், தன் பாட்டுக்கு வெட்டிக் கொண்டிருந்தான். அந்த மனிதன் அங்கிருந்து சென்று விட்டான். சில நிமிடங்கள் கழித்து, ஒரு போலீஸ்காரர் அங்கு வந்தார். அவர் தலையைக் கண்டவுடனேயே மரத்தை வெட்டிக் கொண்டிருந்தவன் அங்கிருந்து ஓடிவிட்டான். உண்மையில் முதலில் வந்த நபர் ஒரு போலீஸ்காரர்தான். அவர் சீருடையில் இல்லை என்பதால், மரம் வெட்டியவன் அவரை மதிக்கவில்லை. சில நிமிடங்களில் காக்கிச் சீருடையில் அதே நபரைக் கண்டவுடன் பிடித்தான் ஓட்டம்! ஆக, உடை என்பது அதன் தன்மைக்கு ஏற்ப விளைவுகளை ஏற்படுத்துகிறது. இது போன்றதுதான் தேவிபாவ அலங்காரம்.

அம்மாவுடன் பலமணி நேரம் பேசினாலும் திருப்தி அடையாத பக்தர்கள், தேவிபாவ தரிசனத்தின் போது சில நிமிடங்கள் பேசியதும் திருப்தி அடைந்து விடுகிறார்கள். தங்கள் மனக் கவலைகளை தேவியிடமே நேரில் கூறிய மன நிறைவினை அவர்கள் பெறுகிறார்கள்.



\- மௌலி

பாம்புகளைப் பற்றி நிறைய விஷயங்கள் தெரியும். அவனிடம் பாம்புகள் பற்றி நிறைய புத்தகங்கள் உண்டு. பாம்பு கடித்ததும், அவன் என்ன செய்தான் தெரியுமா? நேரே தன்னுடைய வீட்டுக்குப் போனான். தன் வீட்டு அலமாரியில் இருந்த பருமனான புத்தகம் ஒன்றை எடுத்து, தன்னைக் கடித்தது என்ன வகை பாம்பு, அதன் தன்மை எத்தகையது, என்றெல்லாம் அறிந்துகொள்ள முற்பட்டான். அந்தோ பரிதாபம்! பாம்பு கடித்தால் என்ன செய்ய வேண்டும் என்ற பகுதிக்கு வரும் முன்பாகவே அவனுடைய உடலில் பாம்பின் விஷம் பரவி, இறக்க நேர்ந்தது. பாம்பு கடித்தால் உடனடியாக முதலுதவி செய்து கொண்டு, மருத்துவரிடம் செல்ல வேண்டுமா: பாம்பைப் பற்றிய புத்தகம் படிக்க வேண்டுமா?

வாழ்க்கையில் துன்பம் வரும்போது அந்தத் துன்பத்தைப் பற்றியே சிந்தித்து, சோர்ந்து போகாமல் அதனை எப்படி சமாளித்து முன்னேறிச் செல்வது என்றுதான் பார்க்க வேண்டும். மனம் இருந்தால் மார்க்கமுண்டு என்பது உங்களுக்குத் தெரியாததா என்ன?

(அன்பு பெருகும்

# அரசியல் சிக்கலில் செல்வி?

**சின்னத்திரையின் முன்னணி இயக்குனர் சி.ஜே.பாஸ்கர். பெண்களின் இதயங்களைக் குறிவைத்து, அவர் இயக்கிய 'சித்தி', 'அண்ணாமலை' இரண்டும் பெரு வெற்றி பெற்றவை. தற்போது 'பெண்' சீரியலில் பிஸியாக இருந்தவரிடம் பேசினோம்.**

"அப்படி என்னதான் பிரச்னை உங்களுக்கும் ராதிகாவுக்கும்..." என்று பழைய விஷயத்தைக் கிளற, மனிதர் பொரிந்து தள்ளி விட்டார்.

"ஒரு இயக்குனர் கதையை இயக்குகிறாரென்றால் அவருக்குச் சுதந்திரம் வேண்டும். அப்போதுதான் கதை சிறப்பாக அமையும். தேவையில்லாமல் கட்டுப்பாடுகளைத் திணிக்கக் கூடாது. ராதிகா, நல்ல அனுபவம் வாய்ந்த திறமையான நடிகைதான். அதே சமயம் அவர் எந்த அளவுக்குப் புத்திசாலியோ, அந்த அளவுக்கு நானும் புத்திசாலி.

கிட்டத்தட்ட ஐநூற்று இருபது எபிசோடுகள் வரை கடந்து அண்ணாமலை சீரியல் முடிய வேண்டிய சமயத்தில், திடீரென இன்னும் ஐநூறு எபிசோடுகளுக்குக் கதையை வளர்க்க வேண்டும் என நிர்ப்பந்தம் செய்தார். ஆனால் இதற்கு மேல் கதையை வளர்த்து ரசிகர்களைத் துன்புறுத்த எனக்கு மனதில்லை. அதில்தான் பிரச்னை ஆரம்பித்தது" என்றவரிடம், 'உங்களுக்கு ஏற்பட்ட அதே பிரச்னைதான் சுந்தர் கே.விஜயனுக்கும் ஏற்பட்டதா?' என்றோம்.

"என்னையும் சுந்தர் கே.விஜயனையும் ஒப்பிடாதீர்கள். என்னுடைய கதை சரியில்லையென்றோ, இயக்கம் சரியில்லையென்றோ நான் விலக்கப்படவில்லை. நான் விலகியது வேறு. சுந்தர் கே.விஜயன் விலக்கப்பட்டது வேறு."

'ராதிகா அ.தி.மு.க.வுக்குப் போனதால் 'செல்வி' சீரியலை அமுக்கிவிட்டு, 'பெண்' சீரியலை டாப்புக்குக் கொண்டுவரப் போவதாகச் செய்தி அடிபடுகிறதே' என்றால், சிரித்துக்கொண்டே "இதில் அரசியல் எப்படிப் புகுந்ததென்றே தெரியவில்லை. என் கதைமீது எனக்கு நம்பிக்கை உள்ளது. அதை வைத்தே மேலே வர முடியும்" என்றார்.



"மீண்டும் ராதிகாவுடன் இணைந்து பணியாற்ற வாய்ப்பு வந்தால் ஏற்றுக் கொள்வீர்களா?"

"அவர் மீது தனிப்பட்ட முறையில் எனக்கு எந்த வெறுப்பும் இல்லை. ராதிகா மீது எனக்கு நல்ல அபிப்ராயம் உண்டு. 'செல்வி'யைக் கூட என்னைத்தான் இயக்கச் சொன்னார். வேறு கமிட்மெண்டில் இருந்ததால் முடியவில்லை. இன்னொரு வாய்ப்பு வந்தால் கண்டிப்பாக அவருடன் இணைந்து பணியாற்றுவேன். ஒரேயொரு நிபந்தனை... என்னுடைய பணியில் மட்டும் ராதிகா தலையிடக்கூடாது!"

**- மனோன்மனோ**

படங்கள்: **ஸ்ரீஹரி, பொள்ளாச்சி சுந்தரம்**



# உதை உதையாப

"போதும். எங்களை விட்டுடுங்க" என்று ரசிகர்கள் கைகூப்பிக் கதறியும் கோலிவுட் பிரம்மாக்கள் 'தாதா'க்களை தொடர்ந்து ஏவிக்கொண்டே இருக்கிறார்கள். 'தாதா' படத்தை எடுக்காதவர்கள் லிஸ்ட்டில் எஞ்சியுள்ள பாலசந்தர், பாக்யராஜ், சேரன் மூவரும் சந்திக்கின்றனர்.

"வாங்க பாக்யராஜ், வாங்க சேரன்" என்று கும்பிடு போட்டு வரவேற்கிறார் பாலசந்தர்.

"'பொய்' படத்துக்கு அடுத்து நீங்க புதுசா ஒரு படம் எடுக்கப் போறதாவும், அது 'தாதா'க்கள் பற்றின படம்னும் கேள்விப்பட்டோம். நிஜமாவா சார்?" என்று பாக்யராஜ் கொக்கி போட,

"ஆமாஜி, ஊரோடு ஒத்து வாழ்னு சொல்வாங்க. அதான் சட்டுபுட்டுன்னு காரியத்துல இறங்கிட்டேன். கவிதாலயா பேனர்ல படம் வரப் போகுது. வழக்கமா படம் ஆரம்பிக்கறப்ப திருவள்ளுவரைக் காட்டி 'அகர முதல...' குறளைதானேப் போடுவோம். இந்தப் படத்துக்கு, 'துப் பார்க்குத் துப்பாய துப்பாக்கி' குறளைப் போடப் போறோம்" என்கிறார் பாலசந்தர் கூலாக.

அதிர்ச்சியடையும் சேரன் "நீங்க ரெளடிப் படத்தை எடுத்தா ஜனங்க ஏத்துப்பாங்களா சார்?" என்கிறார்.

"நெர்வஸாகாதீங்க சேரன், என்னோட வழக்கமான ஸ்டைல் இதிலும் இருக்கும். இது ஆம்பளை ரெளடிப் படமில்லை. பொம்பளை ரெளடிப் படம். டைட்டில் கூட முடிவு பண்ணிட்டேன். 'கும்முன்னு அடி பெண்ணே!'"

"படத்தோட கதையைச் சொல்ல முடியுமா சார்?"

"அதுக்கென்ன, தாராளமாச் சொல்றேன். என்னோட ஹீரோயின் சாதாரணக் குடும்பத்துல மூத்த பொண்ணு. ரெண்டு தங்கச்சி, ஒரு தம்பி. கண்ணு தெரியாத தாத்தா, காது கேட்காத பாட்டி, கால் ஊனமான சித்தி, பேச முடியாத சித்தப்பான்னு பெரிய குடும்பம். அப்பனோ கொஞ்சமும் பொறுப்பு இல்லாதவன். பொண்ணு செல்போன் கேட்கறா. வாங்கித் தரமாட்டேங்கறான். பையன் 'பைக்' கேட்கறான். முடியாதுங்கறான். 'சீரியல்ல என்ன டயலாக் பேசறாங்கன்னே புரியலை; ஒரு ஹியரிங் மெஷின் வாங்கித் தாடா'ன்னு பாட்டி கெஞ்சறா. காசு இல்லைங்கறான். பொறுத்துப் பொறுத்துப் பார்த்த பொண்ணு பொங்கி எழுந்துடறா."

"ஐய்யோ! அப்பனையே கொன்னுடறாளா?"

"இல்லை. ஆபீஸ் பணத்துல கை வெச்சுடறா. செல்போன், பைக், ஹியரிங் மெஷின்னு எல்லாம் வாங்கறா. அவளோட மேனேஜருக்கு விஷயம் தெரிஞ்சுடுது. எனக்கும் பங்கு கொடுன்னு மிரட்டறார். அவரைப் 'பார்க்'குக்கு வரச் சொல்லிப் போட்டுத் தள்ளிடறா."

"அதாவது கொன்னுடறா. அப்புறம்?"

"இதை வேலை வெட்டி இல்லாம அங்கே படுத்துட்டு இருக்கற ஹீரோ பார்த்துடறான். ரெண்டு பேருமா கூட்டு சேர்ந்து மாமூல் வசூலிக்கறது, ஆட்களைக் கடத்தறதுன்னு ரெளடியிஸத்தை வளர்க்கறாங்க. கடைசியில அவங்க ரெண்டு பேருக்குள்ளயே தகராறு வந்து ஹீரோயின், ஹீரோவைப் போட்டுத் தள்ளிட்டு போலீஸ்ல சரணடைஞ்சுடறா."

மிரண்டு போகும் பாக்யராஜ், "இதைக் கேட்டதும் எனக்கும் 'தாதா' படம் எடுக்கணும்னு ஆசை வந்துடுச்சு. ஹீரோ ஸ்கூல் வாத்தியாரா இருக்கான். ஒரு பையன் சரியாவே படிக்காம எப்ப பாரு 'கிளாஸ்ல' கலாட்டா பண்ணிட்டே இருக்க, ஒரு நாள் கோபம் வந்து பையன் தலையில 'நறுக்'குன்னு குட்டிடறான் அந்தப் பையனோட அப்பா ரெளடி. ஸ்கூலுக்கு வந்து ஹீரோவைப் புரட்டி எடுத்துடறான். அடிவாங்கிட்டு வீட்டுக்குப் போற ஹீரோகிட்டே ஹீரோயின் 'இப்படியா அடி வாங்கறது? வெட்கமா இல்லே. எப்போ அந்த ரெளடியைத்

திருப்பி அடிக்கிறீங்களோ அப்பத்தான் நான் உங்களோடு பேசுவேன்'னு சொல்லிட்டு அம்மா வீட்டுக்குப் போய் டறா."

"பொண்டாட்டின்னா இப்படித்தான் இருக்கணும். அப்புறம்?"

"ஹீரோ யோசிக்கிறான். அந்த ரௌடிக்கு மலேரியா காய்ச்சல் வருது. படுத்த படுக்கையா இருக்கான்னு தெரிஞ் சதும் நேரா போய் கன்னத்துல ஓங்கி அறையறான். அவ்வளவுதான், ரௌடி அவுட். உடனே அவனோட அடியாளுங்க 'இனிமே நீங்கதான் எங்க ளோட தலைவன்'னு தூக்கி



# உதைத்து...

வெச்சுக்கறாங்க."

ஊர்ல இருக்கற மத்த ரௌடிகளை எல்லாம் இதே ஸ்டைலுல பரலோகம் அனுப்பறான். படத்துக்கு ரௌடி வாத்தி யார்னு பேரு."

"நீங்க போற போக்கைப் பார்த்தா நானும் மாயக் கண்ணாடியை ஒத்தி வெச்சுட்டு தாதா படம் எடுத்தாத்தான் ஃபீல்டுல நிக்க முடியும் போலிருக்கே" என்கிறார் சேரன்.

"இதுல என்ன சந்தேகம்?"என்று பாலசந்தர் கூற, "எடுத்துட்டா போச்சு. கிராமத்துல இருந்து பிழைக்க நகரத் துக்கு வர்ற ஹீரோ, எப்படி ரௌடியா கறாங்கறதுதான் கதை. படத்தோட பேர் 'உதை உதையாய் உதைத்து...'" என்கிறார் சேரன்.

"சரி, நாம உடனே போய்க் கத்தி, கபடாவுக்கு ஆர்டர் தந்துடுவோம். இப்ப அதுக்குத்தான் டிமாண்டு! ஹீரோவோட சம்பளத்தைவிட அதுங்களோட வாடகை தான் அதிகமாம்" என்று சேரனோட புறப்படுகிறார் பாக்யராஜ்.

"எப்படி இருந்த தமிழ் சினிமா இப்படி ஆயிடுச்சே... பீம்சிங், கே.பி.நாகராஜனுக் கெல்லாம் இப்படியொரு வாய்ப்பு இல்லா மலே போய்டுச்சு. பாவம்! அவங்க கொடுத்து வெச்சது அவ்வளவுதான்" என்று தனியே புலம்பத் தொடங்குகிறார் கே.பி.

கற்பனை : **யுவராஜ்**

அண்மையில் எனது உறவினரின் சஷ்டியப்த பூர்த்தி விழாவுக்கு, திருக்கடையூர் அபிராமி கோயிலுக்குச் சென்றிருந்தேன்.

மிகவும் பழமை வாய்ந்த புராண கால வரலாற்றில் இடம்பெற்ற சிறப்புமிக்க ஸ்தலம். ஆனால் இக்கோயில் அரசின் கட்டுப்பாட்டில் வரவில்லை. ஆதினம் மேற்பார்வையில் இயங்கும் நிர்வாகம். முகூர்த்த நாட்களில் முப்பது, நாற்பது ஜோடிகளின் திருமண வைபவங்களும், உடல் ஆரோக்கியத்துக்கு யாகங்களும் வைதீக முறைப்படி நடைபெறுகின்றன. நிறைய ஜனத்திரள். ஆனால் கோயில் சுற்று வட்டாரத்தில் நல்ல குடிநீர். வசதியோ, சுகாதார வசதிகளோ இல்லை. தவிர, கோயிலுக்குள் நுழையும்போதே ஏராளமான பிச்சைக்காரர்கள் உங்களை முற்றுகையிடுவார்கள். இந்தத் துன்பங்களை அனுபவித்த பிறகு தான் அபிராமியை, சிவலிங்கத்தைத் தரிசிக்கமுடியும். நல்ல வருவாய் உள்ள இக்கோயிலை இந்து அறநிலையத்துறை மேற்பார்வையிட்டு உரிய நடவடிக்கை எடுத்தால் பக்தர்கள் மகிழ்வார்கள். கவனிக்குமா அரசு?

- ரேவதிப்ரியன், ஈரோடு

### யோசிக்கட்டும்!...

வங்கிகளில், நமக்கு மற்றவர்கள் தரும் செக்கை நம் கணக்கில் வரவு வைக்க 'கிளியரிங்' என்ற முறை மூலம் மாற்றுவார்கள். இதற்காக, வாடிக்கையாளர்கள், ஒரு குறிப்பிட்ட படிவத்தில் விவரங்களை எழுதி, அத்துடன் அந்த செக்கை இணைத்து வங்கிகளிடம் தருவார்கள். வங்கி அலுவலர்கள், அந்த செக்கையும் படிவத்தையும் பெற்றுக்கொண்டு, படிவத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் ஒரு பகுதியை அவர்களின் வங்கியின் 'ஸ்டாம்ப்' போட்டுக் கையெழுத்திட்டுத் திருப்பித் தருவார்கள். வாடிக்கையாளர்களுக்குத் தங்கள் கணக்கில் அந்தத் தொகை 'கிளியரிங்' மூலம் வரவு வைக்கப்பட்டிருக்கிறதா என்று தெரிந்துகொள்ளவும் தங்கள் தரப்பை நிரூபிக்கவும் அந்த 'கவுன்ட்டர் ஃபாயில்' முக்கியமானது. இதுபோல்தான் நடைமுறை இருந்து வந்தது.

ஆனால், தற்போது பல வங்கிகளில் இந்த செக்குகளை அலுவலர்கள் வாங்கிக் கொள்வதற்குப் பதிலாக ஒரு பெட்டியில் போட்டுவிட்டுப் போகச் சொல்கிறார்கள்.

வாடிக்கையாளர்கள், செக்குடன் சலானை இணைத்து அந்தப் பெட்டியில் போட்டுவிட்டு கவுன்ட்டர் ஃபாயிலை எடுத்துச் செல்ல வேண்டும். அந்த செக்குடன் சலானும் சேர்ந்து தொலைந்து போய் விட்டால் என்ன செய்வது? கவுன்ட்டர் ஃபாயில்மேல் வங்கியின் ஸ்டாம்ப், அலுவலர்களின் கையெழுத்தோ இல்லாமல் அது தகுந்த ஆதாரமான ஆவணமாய் இருக்க முடியுமா? இவ்விஷயத்தில் வங்கிகள் யோசித்துச் செயல்பட வேண்டும்!

- வே.சு.ஸ்ரீதரன், சென்னை

### ஆண் - பணம்!

கோபிசெட்டிபாளையத்தில் ஓர் ஆட்டோவின் பின்புறத்தில் நான் ரசித்த வாசகம் :

**'இவ்வுலகில் பெண் அதிகமாக விரும்பும் பொருள் முகம் பார்க்கும் கண்ணாடி. ஆண் விரும்புவது அதை விலைக்கு வாங்கும் பணம்...!'**

- ஏ.எஸ்.யோகானந்தம், ஔவையார்பாளையம்





# GOKULAM CALIBRE COMICS

For Wholesome Development...

Rs.12/- Only

August Issue



## GENIE GARUDA

## A STRANGE NIGHT





## EXQUISITE GIFTS



## CHARLIE THE CLOWN

**பரிசுக் கதை**

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசு

ரூ.5,000 பெறும் கதை

# பார்வை!

எவ்வளவோ பாந்தமாத்தான் ஆரம்பிச்சாரு குமரேசன். "இத பாருப்பா, எங்களுக்கு உன்னோட ஒரு பிரச்னை. நாங்க சொல்றதைக் கவனமா கேட்டு ஒரு முடிவு எடுத்துரு"ன்னு தொடங்கினார். ரெங்கன் செய்திட்டிருக்கிற அநியாயத்துக்கும் அவன் சகவாச வட்டத்துக்கும் யாரு இப்படிப் பேசுவா? ஆனா அவனோ, "இன்னாய்யா?"ன்னு சர்ருன்னு உச்சத்துக்குப் போய்க் கத்த ஆரம்பிச்சுட்டான். அப்புறமும் இவரு ஏன், தான் யாருன்னு சொல்லாம இப்படி மேலும் மேலும் பேசிட்டிருக்காருன்னு எனக்குப் புரியலே.

"என்ன பெரிய அநியாயத்தைக் கண்டுட்டே? இது என் பொழப்பு. எங்க வேணும்னாலும் கடை வெப்பேன். கேக்க வேண்டியவன் கேட்டுக்குவான். நீ யாருய்யா கேட்க? போய்யா!" என்று பெரும் குரலெடுத்துக் கத்தினான் ரெங்கன். அப்பவும் குமரேசன், "இரு இரு. நான் சொல்ல வந்ததை முழுசா கேட்டுட்டு அப்புறம் கத்து!" என்றாரே தவிர, தன்னைப் பற்றி... ஊஹூம்!

"நீ ஒண்ணும் சொல்ல வேணாம். எல்லாம் தெரியும் எனக்கு. ஆளானப்பட்டவன் எல்லாம் எங்கிட்ட மண்ணைக் கவ்வியிருக்கான். இந்த மாதிரி எத்தனை பேரைப் பாத்திருப்பேன் நானு?" என்றவன், "என்னாங்கடா?"ன்னு அவர் பின்னால நின்னுட்டிருந்த எங்க மேல ஒரு பாய்ச்சல் பாய்ஞ்சானே பார்க்கலாம்!

"சார் நீங்க யாருன்னு..." என்று நான் கோபாவேசமாக ஆரம்பிக்க, அவரோ கை காட்டி என்னையும் மத்தவங்களையும் அடக்கி விட்டார்.

இப்ப இவர் மட்டும் வரலேன்னா இதைப் பேசியே இருக்க மாட்டோமே! எப்பவும் போல இந்தப் பிரச்னையை ஒத்திப்போட்டு அப்படியேதான் கிடக்கும்.

கொடுமைதான். கண்டுக்காம போக முடியாதுதான். ஆனா அதுக்காக அதைப் பேசித் தீர்க்க நினைச்சு இன்னும் பெரிய ஆபத்தில் சிக்கிக்க முடியுமா? நாம என்ன படிக்காதவனா, விவரம் இல்லாம வில்லங்கத்தில மாட்டிக்கிறதுக்கு? தெரிஞ்சே அசிங்கத்தில் காலை வெக்கலாமா? ரவுடிட்டயும் கேடிட்டயும் போய் நியாயம் பேச முடியுமா?



காலையில்தான் நானும் குமரேசன் சாரும் கிருஷ்ணமூர்த்தி சார் வீட்டுக்கு வந்திருந்தோம். அவர் மகள் பிருந்தாவைப் பெண் பார்க்க வர்றாங்கன்னு அழைச்சிருந்தார். அங்கதான் இந்த விஷயம் பத்தி பேச்சு வந்தது.

காற்றோட்டமான, அமைதியான ஏரியான்னு கூடுதல் விலை கொடுத்து இந்த இடத்தில் ஃபிளாட் வாங்கி வீடு கட்டினார். சாமிநாத நகரின் கடைசிப் பகுதி இது. ஒவ்வொண்ணா அப்புறம் இருபது வீடு வந்துட்டது. நிலத்தை ஃபிளாட் போட்டு விற்றவர் ரொம்ப நல்ல மாதிரி. பிற்பாடு ரோடு பெரிசாகலாம்னு ஓரமா பொது இடம் கொஞ்சம்விட்டு உள்ளே வழிப்பாதையைக் கொண்டு போனார்.

திடீர்னு ஒரு நாள் அதிலே நச்சென்று ஒரு கடையைப் போட்டுட்டான் இந்த மீசைக்கார ரெங்கன். "அப்பால என் கடை வேலை நடக்குது. அதான் கொஞ்ச நாள் டெம்பரரியா இங்க.... பத்துப் பதினஞ்சு நாள்ல எடுத்துருவேன்"னு

சொன்னவன் நிரந்தரமாகத் தங்கிவிட்டான். அவன் சொன்ன மாதிரி எந்தக் கடையும் அவனுக்குக் கிடையாதுன்னு தெரிய வந்து அவனைக் கேட்டப்ப சிரிச்சான்.

"இப்ப என்ன உங்க காலனி நிலத்திலயா என் கடை முழுசும் இருக்கு? ரோட்டில்தானே முன்னங்காலை ஊன்றியிருக்கேன்? கொஞ்சம்போல அந்தப் பக்கம் நீண்டுட்டுது, அவ்வளவுதானே? விட்டுத் தள்ளுவியா..." என்று ஒரு மாதிரி கோபமாகப் பேச ஆரம்பித்தான். பக்கத்தில் கைலியை மடிச்சுக் கட்டிக் கொண்டு நின்றிருந்த ரெண்டு தடியன்களை வேறு பார்த்ததும் வீட்டுக்காரர்கள் கம்மென்று ஆகிவிட்டார்கள்.

கொஞ்ச நாளில் கடை இன்னும் விஸ்தரிக்கப்பட்டுவிட்டது. நகரின் கடைசிப் பகுதியில் அந்தக் கடை இருந்தாலும், அரை கிலோமீட்டரில் தொடங்கப்பட்டுள்ள பொறியியல் கல்லூரி ஒன்றிற்கு அது வழியாக இருந்ததாலும் கடை களை கட்டிவிட்டது. நகரின் மற்ற பகுதிகளிலுள்ள வேலையற்ற பையன்கள் கடை முன் நின்றுகொண்டு புகை பிடிப்பதும், காலேஜ் போகிற பெண்களைக் கிண்டல் செய்வதுமாக... அது முற்றி இந்த காலனியைச் சேர்ந்த பெண்களையே சமயத்தில் கேலி செய்வது வரை போய்விட்டது. கடைக்கு ஒரு பாதுகாப்பாக நினைத்து ரெங்கன் அந்தப் பையன்களை ஆதரிக்கவே, எதையும் யாரும் தட்டிக் கேட்க முடியாமல் போய்விட்டது. எதுக்கு வம்பு என்று வயதில் பெண்கள் உள்ள சில வீட்டுக்காரர்கள் ஒதுங்கிவிட,

# கே.பி.ஜனார்த்தனன்



ஒரு ஜாயின்ட் மனு கொடுக்கவும் வழியில்லாமல் ஆனது.

ஆனால் கிருஷ்ணமூர்த்தி, நான் அவர் வீட்டுக்கு வரும்போதெல்லாம் புலம்புவார். பிருந்தாவுக்குக் கொஞ்சம் மியூசிக் வரும். இசைக் கச்சேரி ஒன்றில் கீ போர்ட் வாசிக்க பிராக்டீஸ் எடுக்க அவளை அழைத்துப் போக, அவள் கசின் அபினேஷ் வருவான். போன வாரம் அவர்கள்

ரெங்கன் கடையைக் கடந்து போகும்போது கடையில் நின்றிருந்தவர்கள் கொச்சையாக ஏதோ பேசி அவர்களைக் கலவரப்படுத்த, பிருந்தா நொந்துபோய் இசை வகுப்புக்குப் போவதையே நிறுத்தி விட்டாள்.

நாலைந்து வீட்டினருக்கு இதே போன்ற பாதிப்பு நடந்துவிட்டது. ஆனால் எதுக்குப் பிரச்னைன்னு ஆளுக்கொரு காரணம் சொல்லி ஒதுங்கினர். மீசைக்கார ரெங்கனுக்கு மோசமா ஏதாவது நேரணும்னு வேண்டிக் கொள்வதோடு சரி.

ஒரு வாரத்தில் சொல்றோம் என்று பையன் வீட்டார் சொல்லிப்போன பிறகு எல்லாரும் பேசிட்டிருந்தபோதுதான் இந்த விஷயம் வந்தது. குமரேசனிடம் எல்லாரும் கொட்டித் தீர்த்துவிட்டனர்.

"எத்தனை நாளா நடக்குது?" என்றார் கவலையுடன்.

"அது இருக்கும் சார் ஆறு ஏழு மாசம். என்ன சார் பண்றது? எல்லாரும் மிடில் க்ளாஸ். சேலையும் முள்ளும் மாதிரி இது நமக்குத்தானே பிரச்னை?"

"கனவுல நயன்தாரா வந்தாலே பயமா இருக்கு!"
"ஏன்?"
"மறுநாள் கனவுல சிம்பு வந்து பின்னி எடுத்துடறார்!"
- அம்பை தேவா

ஒரு முறை முறைச்சாரே பாக்கணும்! "கிளம்புங்க." கிருஷ்ணமூர்த்தி உட்பட எல்லார் முகத்திலும் ஒரு மின்னல். ஆஹா, தீர்ந்தது பிரச்னை என்று கிளம்பினோம்.

ஆனா எதிர்பார்த்தது என்ன; நடக்கிறது என்ன? தான் யாருன்னு சொல்லி கம்பீரமா தொடங்கி ஒரு கெடு வெப்பாருன்னு நினைச்சா, அவர் விஷயத்தை வேற மாதிரியில்ல கொண்டு போறாரு? இதுக்கு அவர் எதுக்கு?

ஏன் இவரு சொல்லமாட்டேங்கிறாரு தான் யாருன்னு?

"என்னாங்கடா..." என்றதும் பின் வாங்கிய எங்கள் மிடில் க்ளாஸ் கூட்டத்தைப் பார்த்ததும் ரெங்கனுக்கு வீரம் பொங்கிவிட்டது. அவன் பாட்டுக்குத் தொடர்ந்து வசைபாட ஆரம்பித்தான்.

கொஞ்ச நேரம் குறுக்கே பேசாம விருந்து அவனை ஓயவிட்டார் குமரேசன்.

"முடிஞ்சுதா? சரி, இனி நான் சொல்றேன். நான் சொல்றதை நல்லா கேட்டுட்டுப் பதில் சொல்லு. எங்களை மாதிரிதான் நீயும். உனக்கும் ஒரு பொழப்பு வேணும்னு எங்களுக்குத் தெரியும். அதுக்குத்தான் இந்தக் கடையைத் தொடங்கியிருக்கே. அதுவும் சரிதான். ஆனா நீ என்ன பண்ணியிருக்கே? பாதிக் கடை சர்க்கார் ரோட்டில் போட்டிருக்கே. பாதிக்கடை இந்த காலனி நிலத்தில் போட்டிருக்கே. அதை எப்படி நாங்க சம்மதிக்க முடியும்?"

"ஆ, சும்மாத்தானே கிடக்கு இந்த இடம். அதில் நான் ஏதோ வெச்சுப் பிழைச்சுக்கிறேன். கண்டுக்காம போவியா.."

"அதெப்படி கண்டுக்காம போக முடியும் நாங்க? நீ விடுவியா? உன் பொண்டாட்டி பிள்ளைகளோட நீ வீடு வெச்சிருக்கிற இடத்தில் ஒருத்தன் வந்து ஆக்கிரமிச்சுக் கடை போட்டா கண்டுக்காம போவியா? அதில் ரௌடிப் பசங்க கூடி நின்னு உன் பொம்பளைப் பிள்ளைகளைக் கிண்டலடிச்சா நீ சும்மா இருப்பியா?"

ஒரு செகண்ட்தான். அதுக்கு மேல ரெங்கன் தன் யோசனையை அந்தப் பக்கம் போகவிடலே. "அதிருக்கட்டும் முதல்ல நீ யாரு? உன்னை இந்தக் காலனியிலே பார்த்ததே இல்லையே? உனக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?"

பளார்னு ஒண்ணு விடுவார்னு எல்லோரும் ஆவலோடு எதிர்பார்த்தோம். ஆனா அவரோ ரொம்ப நிதானமா, "என் பேரு குமரேசன். இந்தா நிற்கிறாரே கிருஷ்ணமூர்த்தி அவரோட பெரியப்பா மகன். எனக்கு வேலை இங்க மாத்தலா

யிருக்கு. இவரு வீட்டில்தான் தங்கப் போறேன். அதான் எல்லாருமா வந்திருக்கோம்."

"இந்தா பாருய்யா, அக்கம்பக்கத்தில் ஆயிரம் நியாயம் அநியாயம் நடக்கத்தான் செய்யும். நம்ம வேலையைப் பார்த்துட்டு நாமதான் ஒதுங்கிக்கணும். பிடிக்க லேன்னா நாமதான் வேற ஏரியா பாக்கணும்."

"சரிப்பா, நீ முன்னாடி வந்து இங்கே கடை போட்டு இந்த இடத்தை லாயக்கில் லாம பண்ணி வெச்சிருந்தியானா நாங்க யோசிச்சுத்தான் இங்க குடியேறணும். ஆனா அப்படியில்லியே... லோன் போட்டு வீடு வாங்கி நாங்க இல்ல முதல்ல இங்கே குடியேறியிருக்கோம்... எங்க இடத்தைப் பாது காக்க வேண்டியது



எங்க வேலை. நாங்க இதை விட்டுட்டு ஓட முடியாதுல்ல? நீ இதைச் செஞ்சுதான் ஆகணும். வேற வழி கிடையாது. நாங்க மாற முடியாது. நீ தான் மாறணும். வேற இடம் பார்த்துக்கணும்"-அழுத்தமாகச் சொன்னார்.

"அப்ப என் பொழப்பு? வேற இடம் ஏது எனக்கு?"

"பொழப்பா? பொழப்புங்கிற வார்த்தையைச் சொல்லாதே. அடுத்தவன் இடத்தில் கடைபோடறது எப்படிப் பொழப்பாகும்? அப்ப ஒழுங்கா பிழைக்கிற நாங்க எல்லாம் மடையனா? சரிதான், ராத்திரி வந்து உன் கடையி லிருக்கிற சாமான்களை ஒரு திருடன் தூக்கிட்டுப் போயட்டு, அது என் பொழப் புன்னு சொன்னா நீ விடுவியா...?"

"என் கடையில வந்து ரவுடிங்க நின்னு கலாட்டா பண்ணினா அவங் களைக் கேளு. எங்கிட்ட ஏன் வர்றே?"

"அதெப்படி? உன் கடையில அனாவசியமா ரவுடிங்க வந்து நின்னா நீதானே அவங்களை அகற்றணும்? உன்னால முடியாது. ஏன்னா உனக்கு அந்த ரைட் இல் லேம்பான். ஏன்னா கடையே தப்பு. நீ கடையைத்தான் மாத்தணும்."

ரெங்கன் அந்த வழியில் யோசிக்கவே தயாராயில்லேன்னு தெரிஞ்சது. "அதெல் லாம் ஒண்ணும் முடியாது. என்ன பண்ணிடுவே நீ?"

"என்ன பண்ணுவமா? என்ன பண்ணணுமோ அதைத்தான் பண்ணு வோம். கேஸ் போடுவோம். உனக்கு நாலு ரவுடி இருக்கான்னா எங்களுக்கும் தெரிஞ்சவங்க போலீசிலே யும் எல்லா டிபார்ட் மெண்டிலேயும் இருப்பாங்க. எடுத்துச் சொல்லுவோம். இதுக்கு நடுவில் எங் களுக்கு ஏதாவது பிரச்னையோ, ஆபத்தோ வந்தா அதுக்கு நீதான் பொறுப்புன்னு எழுதிக் கொடுத்துரு வோம். எங்களுக்கு எந்த ஆபத்து வந் தாலும் உன்னைத்தான் கேட்பாங்க. நீ தான் சமாளிக்கணும். உன்னால நடக்க லேன்னு நீதான் ப்ரூவ் பண்ணணும். இப்ப உங்கிட்ட பேசிட்டு நேரா போய்ப் புகார் கொடுக்கப்போறோம்.

ஆனா அதுக்கு அவசியம் இருக் காதுன்னு நினைக்கிறோம். நீ எப்படி வேணுமின்னாலும் முடிவெடு. ஆனா ரெண்டு பக்கமும் யோசிச்சுக்க. ஒழுங்கா காலி பண்ணினா பிரச்னை தீர்ந்தது. வேற மாதிரி முடிவெடுத்தா எங்களுக்குத்தான் கஷ்டம்னு நினைக்கிறே பாத்தியா, அப்படியில்ல. உன் கஷ்டத்தையும் நினைச்சுப் பாத்துக்க."

அதுவரை படார் படார்னு குறுக்கே பேசிட்டிருந்த ரெங்கன், முதல் முதலா ஒரு வினாடி இடைவெளி விட்டான். கூட்டம் ஆச்சரியமா அதைக் கவனித்தது.

"இப்ப என்னான்றே?" என்றான் குரலில் காட்டம் குறையாமல். "ஆளுக்குக் கொஞ்சம் பணம் கொடுங்க. அதைவெச்சு






நான் வேற இடத்துக்குக் கடையை மாத்திக்கிறேன். ஒரு பத்தாயிரம் வர்ற மாதிரி கொடுங்க."

குமரேசன் துளியும் ஆச்சரியமின்றி அதை எதிர்பார்த்த மாதிரி பேசினார். "பத்தாயிரம் என்ன அதுக்கு மேலயும் கொடுக்கலாம். ஆனா இந்த விஷயத்துக்குத் தரமுடியாது. அப்படிக் கொடுத்தா நீ செய்தது சரின்னு நாங்களே ஒத்துக்கிட்ட மாதிரி ஆயிடும். அப்புறம் நான் இவ்வளவு நேரம் பேசினதெல்லாம் தப்பாயிரும். அதெல்லாம் நினைச்சுக்கூட பார்க்காதே. நீ செஞ்சதை சரி பண்ணிக் கொடுக்கிறே. இதுக்கு நாங்க ஏதும் பண்ணணும்னு கிடையாது. ஆனா உனக்கு நாங்க ஒண்ணு செய்ய முடியும். இந்த ஏரியாவில் எங்கயாவது நீ ஒரு கடை வாடகைக்கு எடுத்து டீசன்டா நடத்தினா, நாங்க எல்லாரும் அங்கே பொருள் வாங்கி நீ நல்லபடியா பொழக்கிறதை ஆதரிப்போம், கண்டிப்பா."

சொல்லி முடித்ததும் ரெங்கன் அவரைப் பார்த்த பார்வை இருக்கே! அவன் கண்ணைக்கொண்டே அவனைப் பார்க்க வெச்சிட்டார்.

"நம்ம சாமிநாத நகர் வடக்குக் கோடியில் ஒரு கடை காலியிருக்கு, பாக்கிறியா?" என்று ஒருத்தர் கேட்க, ரெங்கன், "வாடகை எவ்வளவு சார் இருக்கும்?" என்றான் இயல்பாக...

**வீ**ட்டுக்குத் திரும்பி வரும்போது... பிரச்னை சுமுகமாக முடிந்த திருப்தி எல்லாருடைய முகங்களிலும்.

இன்னொரு பக்கம் வேறொரு பிரமிப்பு. என்னை மாதிரியே எல்லார் மனசையும் குடைஞ்சிட்டிருந்தது. கடைசிவரை தான் யாருன்னு சொல்லாமலேயே விஷயத்தை முடிச்சிட்டார் குமரேசன்.

"முதல்லேயே நீங்க யார்னு சொல்லியிருக்கலாமே? அவன் அனாவசியமா பேசியிருக்க மாட்டானே?" என்றேன்.

"அது ஏன் தேவையில்லாம? நம்மைப் பாதிக்கிற ஒரு விஷயம் நடக்கிறப்ப நாம எதுத்து நின்னு செயல்பட முடியும். எடுத்ததுக்கும் தொடுத்ததுக்கும் யாரோ வந்து உதவணும்னு எதிர்பார்க்கக் கூடாது. பாதிக்கப்பட்டவங்களும் முயற்சி செஞ்சு பார்க்கணும். முயற்சி செஞ்சா முடியும். பத்துக்கு ஒன்பது பிரச்னைகளை நேரடியா நிதானமா பேசியே சுமுகமா தீர்த்திரலாம். அப்படி நீங்க செய்ய முடியும்னு புரிய வெக்கத்தான் அதைச் சொல்லலே. அது மட்டுமில்லே. என்னைப் பத்திச் சொல்லியிருந்தா என் பேச்சில் உள்ள நியாயத்தை அவன் கவனிச்சிருக்க மாட்டான். பயந்துதான் ஒதுங்கியிருப்பான். வேறொரு இடத்துக்குப் போய் தன் கைவரிசையைக் காட்டியிருப்பான். என்னுடைய நோக்கம் அவனை இங்கேருந்து ஓடவெக்கிறது இல்லே. அவன் கிட்டருந்து இந்தத் தீய செயலை ஓட வெக்கிறதுதான்" என்றார் இன்ஸ்பெக்டர் குமரேசன்.

எங்கள் பார்வையில் பெருமிதமும், நன்றியும்.

○

# மீண்டு(ம்) வருவாரா காஸ்ட்ரோ?



பத்து அமெரிக்க ஜனாதிபதிகள் வந்து போய்விட்டார்கள். ஐம்பது முறைக்கு மேல் கியூபா அதிபர் ஃபீடல் காஸ்ட்ரோவை ஆட்சியிலிருந்து அகற்றவும், அடியோடு அழிக்கவும் அவர்கள் எடுத்த அத்தனை முயற்சிகளும் தோல்வியில் முடிவடைந்தன.

எண்பது வயதைத் தாண்டிவிட்டார் என்கிற நிலையில் 'இயற்கையே' அவரது பதவியைப் பறிக்கலாம் என்று அமெரிக்க அதிபர்கள் ஆசைப்பட்டிருக்கக் கூடும். அக்டோபர் 2004-ல் மேடையில் பேசிக் கொண்டிருந்தபோது கீழே விழுந்தார் காஸ்ட்ரோ. அவரது இட முழங்காலில் பலத்த அடி. இடக் கையில் எலும்பு முறிவு. கியூபா மக்களிடையே பலத்த வதந்தி. 'காஸ்ட்ரோவின் ஆட்சி முடிவுக்கு வந்துவிட்டதா?'

இதற்கு முடிவுகட்டும் வகையில் ஓர் அரசு அறிக்கை வெளியானது. ஃபீடல் காஸ்ட்ரோவுக்கு மூன்றரை மணி நேர அறுவை சிகிச்சை நடந்ததாகவும், அதில் தன் இடுப்புக்குக் கீழ் மட்டுமே மயக்க மருந்து அளித்து சிகிச்சை அளிக்க காஸ்ட்ரோ அனுமதித்ததாகவும் அந்த அறிக்கை கூறியது. அந்த நிலையிலும் தமது அதிகாரத்தை வேறு யாரிடமும் ஒப்படைக்கவில்லை என்பதைத் தெளிவுப்படுத்தியிருந்தார் காஸ்ட்ரோ.

ஆனால் சமீபத்தில் யாருமே எதிர்பாராத வகையில் ஃபீடல் காஸ்ட்ரோ தானாகவே பதவியிலிருந்து நகர்ந்திருக்கிறார். 'தாற்காலிகமாகத்தான்' என்று கூறப்பட்டாலும், அடுத்த வாரிசாக நியமிக்கப்பட்டிருக்கும் ரால் காஸ்ட்ரோ (ஃபீடல் காஸ்ட்ரோவின் தம்பி), இனி தொடர்ந்து கியூபாவை ஆட்சி செய்வார் என்ற கருத்தும் வலுப்பெற்று வருகிறது.

'ஃபீடல் காஸ்ட்ரோவின் உடலைத் தாக்கியது புற்றுநோய், குடலில் இரத்தக் கசிவு, குடலில் தொற்றுக் கிருமிகள்' என்று பலவித யூகங்கள். அறுவை சிகிச்சை தேவை என்பது தெரிந்தாலும் அது நடந்துவிட்டதா என்பது தெரியவில்லை.

புதிய கியூபா அதிபர் ரால் காஸ்ட்ரோவுக்கு அண்ணனைப் போல் தாடி இல்லை. ஆனால் அவரைப் போலவே துணிவுமிக்கவர். சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன் கியூபாவை ஆண்ட படிஸ்டா என்ற கொடுங்கோலனைப் புரட்சியின் மூலம் அப்புறப்படுத்தியவர்களில் ராலுக்கும் முக்கியப் பங்கு உண்டு. அரசு ஃபீடல் தலைமையில் அமைந்தது என்றாலும் இராணுவம் ராலின் கீழ்தான் இயங்கி வருகிறது. பாதுகாப்பு அமைச்சர் பதவியைச் சிறப்பாகவே நடத்தி வந்திருக்கிறார் ரால்.

நம்ம ஊர் ஓ.பன்னீர்செல்வம் போல் ரால் காஸ்ட்ரோவும் கியூபாவைத் தாற்காலிகமாக ஆட்சி செய்து அப்படியே அதை மீண்டும் தலைவரிடம் ஒப்படைப்பாரா அல்லது திரைமறைவில் நிரந்தர அந்தஸ்தே அவருக்குக் கொடுக்கப்பட்டதா என்பது விரைவில் தெரிந்துவிடும். மற்றபடி அமெரிக்க - கியூபா உறவுகள் இப்போதைக்கு மேம்படும் என்று தோன்றவில்லை. எந்த 'காஸ்ட்ரோ'வாக இருந்தாலும் அமெரிக்காவுக்கு அசம்மதம்தான்!

ஜி.எஸ்.எஸ்.

அரசாங்கம் யோசிக்க மறந்த, செய்யத் தவறிய செயல்களைக்கூட சில தொண்டு நிறுவனங்கள், தனி மனிதர்கள் மக்களுக்காகச் செய்துகொண்டு இருப்பதை நாம் ஆங்காங்கே காண்கிறோம். சென்னையை அடுத்த பெருங்குடியில் உள்ள நந்தினி வாய்ஸ் என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனமும் அப்படிச் சில செயல்களைச் சத்தமில்லாமல் செய்து கொண்டு இருக்கிறது.

''மிகப்பெரிய அளவில் வேலை வாய்ப்பை அளிக்கும் துறை கணிப்பொறித் துறை. ஆனால் இதை அரசு தனியாரிடம் தூக்கிக் கொடுத்துவிட்டது. வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ளவர்களின் நிலை அப்படியேதான் இருக்கிறது. இதைப் போக்க வேண்டும் என்ற நோக்கத்தில்தான் இந்த 'நந்தினி வாய்ஸ் ஃபார் தி டிப்ரைவ்டு' தொடங்கப்பட்டது'' என்கிறார் இதன் இயக்குநர் வெங்கட்ராமன்.

இவர் ஒரு வேதியியல் பொறியாளர். "மனைவி மற்றும் சில நண்பர்களின் உறுதுணையில் மட்டுமே இந்த நந்தினி வாய்ஸ் மக்களுக்காகக் குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறது'' என்கிறார்.

சென்னை, திண்டுக்கல், நாகர்கோவில் உட்பட ஆறு இடங்களில் கணிப்பொறி மையத்தை ஆரம்பித்து, பன்னிரண்டாம் வகுப்புப் படித்த வசதியற்ற மாணவர்களுக்கு முழுக்க முழுக்க இலவசமாகவே சொல்லிக் கொடுக்கிறார்கள். அப்படி இங்கே பயின்றவர்களில் பலர் வேலை வாய்ப்புப் பெற்றுச் சென்றிருக்கிறார்கள்.

இது மட்டும்தானா? "ஊனமுற்றோர்களில் தொண்ணூறு சதவீதம் பேர் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருப்பவர்கள். இவர்களுக்கு அரசாங்கம் இதைச் செய்கிறோம், அதைச் செய்கிறோம் என்று பெரிதாக அறிவிப்புகள் விடுக்கிறது; சட்டம்கூட இயற்றுகிறது. ஆனால் நடைமுறையில் பத்து சதவீதம்கூட நிறைவேற்றப்படுவதில்லை. உடல்ரீதியாக மட்டும் இல்லாமல் மனரீதியாகவும் இவர்கள் அனுபவிக்கும் துன்பங்கள் ஏராளம். குறிப்பாக, ஊனமுற்ற பெண்கள் நிலை மிகவும் வேதனையானது. இவர்களுக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்று தோன்றியது" என்ற வெங்கட்ராமன், அதை வெற்றிகரமாகச் செயல்படுத்திக் கொண்டிருக்கிறார்.

ஊனமுற்றோர் தயாரிக்கும் பொருட்களுக்கு, பல்வேறு இடங்களில் கண்காட்சி நடத்துகிறார். அப்பொருட்களைச் செய்தவர்களை தமது சொந்தச் செலவில் வரவழைத்து, அவர்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுத்து விற்பனை செய்ய வைக்கிறார்.

''ஒவ்வொரு முறையும் கண்காட்சி நடத்தும்போது அழைப்பிதழ்களை அச்சிட்டு பலரையும் நேரில் சந்தித்து அழைப்பேன். அழைக்கும்போதே ஐம்பதோ, நூறோ எடுத்து நீட்டுவார்கள். 'பணத்தை இங்கே கொடுக்க வேண்டாம் சார். கண்காட்சிக்கு வாங்க. அவங்களைப் பார்த்துத் தட்டிக் கொடுங்க. அப்புறம் ஏதாவது

• ஊனமுற்றோரின் கலைப்பொருள் கண்காட்சியில்...



பொருளை வாங்கிட்டுப் பணம் கொடுங்க' என்றால் 'ஐயையோ என்னை விட்டுடுங்க சார். அதுக்கெல்லாம் நேரமில்லை' என்பார்கள். வெட்டியாகப் பொழுதைப் போக்க நேரமிருக்கும். இது போன்ற நல்ல காரியங்களில் கலந்துகொள்ள நேரம் இருக்காது" என்று வேதனைப்படுகிறார்.

அதனால் இப்போது வேறு முறையைக் கையாள்கிறார். பல்வேறு ஊர்களில் வசிக்கும் அவர்களின் பொருட்களை மொத்தமாக இங்கே வரவழைத்துவிட்டு அதை இங்கே இருப்பவர்கள் மூலம் விற்பனை செய்கிறார்.

# "யாருக்கும் வெட்கமில்லை!"

அரசின் மது விற்பனையால் ஏற்பட்டுள்ள தீமையை எடுத்துச் சொல்வதற்காக சமீபத்தில் ஒரு ஆய்வுக் கூட்டம் நடத்தியிருக்கிறார் வெங்கட்ராமன்.

"பதினெட்டு வயது நிரம்பாத மாணவர்களிடம்கூட இப்போது மதுப் பழக்கம் வேகமாகப் பரவி வருகிறது. மதுவுக்கு அடிமையாகும் ஆண்கள் தமது நாற்பத்தைந்து வயதுக்குள் உடல் ஆரோக்கியத்தை இழந்து குடும்பத்தை கவனிக்க முடியாமல் போய் விடுகிறார்கள். இதனால் பாதிப்பு அவர்களுக்கு மட்டுமல்ல, அவர்களைக் கணவராகப் பெற்ற அப்பாவிப் பெண்களுக்கும்தான். குடும்பச் சுமை அவர்கள் தலையில் விழுகிறது. இதனால் அவர்கள் சந்திக்கும் மன உளைச்சல்கள் கொஞ்சமல்ல" என்று பதறுகிறார்.

இதை எடுத்துச் சொல்வதற்காக சுமார் இருநூறு பெண்களை அழைத்து கூட்டம் நடத்தினார். அதில் ஒவ்வொரு பெண்ணும் தமது கணவனின், தந்தையின் குடிப் பழக்கத்தால் குடும்பத்தில் ஏற்பட்டுள்ள வறுமையை, தீமையைக் கண்ணீருடன் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இது செய்தித்தாள்களிலும், தூர்தர்ஷனிலும் இடம்பெற்றது. ஆனால் பலன் ஏதுமில்லை.


• வெங்கட்ராமன்

"முன்பெல்லாம் ஒரு அரசியல்வாதியைப் பற்றியோ, அதிகாரியைப் பற்றியோ ஒரு புகார் வெளியானால் சம்பந்தப்பட்டவர்கள் பதறுவார்கள். உடனடியாக அதற்கு விளக்கம் தருவார்கள். இப்போது அரசியல் தலைவர்களுக்கும் சரி, அதிகாரிகளுக்கும் சரி, வெட்கம் என்பதே இல்லாமல் போய்விட்டது. இப்படி இருந்தால் மக்களுக்கு எப்படி அவர்கள் மீது நம்பிக்கை வரும்? சமுதாயம் எப்படி முன்னேறும்? இந்தியா முன்னேறிக் கொண்டிருக்கிறது என்று சொல்வதெல்லாம் வெளிப் பேச்சுதான். நம் நாட்டில் நாற்பது சதவீத மக்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே எதிர்காலம் குறித்த பயத்துடன்தான் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள்" என்று சீறுகிறார்.

சமுதாய அக்கறையுடன் நந்தினி வாய்ஸ் குரல் கொடுக்கிறது. ஆனால் இப்படி ஒற்றைக் குரல் ஒலியால் அரசின் செவிகளை அசைக்க முடியுமா? பல குரல்கள் சேர்ந்து ஒலித்தால்தான் பயன் கிடைக்கும். எத்தனை பேர் முன் வரப் போகிறார்கள்?

- யுவராஜ்





# 32

சினிமா மணிக்குப் பதில் சொல்லும் விதமாக, "அது தம்பி, பரதநாட்டியம் சில சமூகப் படங்கள்ல அவ்வளவாக எடுபடாது. ஆனா 'மன்னாதி மன்னன்', 'மதுரை வீரன்' இந்தப் படங்கள்ல பத்மினி நாட்டியத்துக்காகவே படம் பார்க்க ஜனங்கள் அலைமோதும் தெரியுமா?" என்றார் முத்துராக்கு.

இவர்கள் நாட்டியப் பேரொளி பத்மினியைப் பற்றிப் பேசப் பேச, நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். எவ்வளவு திறமை வாய்ந்த நடிகைகள் நம் தமிழ்த் திரையுலகில் வெற்றிவாகை சூடியிருக்கிறார்கள் என்று நினைத்துப் பார்த்தேன். கூடவே சினிமாமணி 'நாம் செய்ததை ஊரெல்லாம் பேச வேண்டும்' என்று கூறியது மீண்டும் மீண்டும் மனதில் ஒலித்தது.

அப்படி பத்மினி அவர்கள் 'தில்லானா மோகனாம்பாள்' படத்தில் செய்ததை ஊரெல்லாம் பேசியது பற்றி இப்போது நினைத்துப் பார்க்கிறேன். ஒருமுறை அவர்களை நான் அமெரிக்காவில் நேரில் சந்தித்துப் பலமணி நேரம் பேசவும், அவர்கள் வீட்டில் உணவருந்தவும் கிடைத்த வாய்ப்பை எண்ணிப் பார்க்கிறேன்.

2003-ம் ஆண்டில் அமெரிக்கத் தமிழ்ச் சங்கங்களின் அழைப்பின் பேரில் அமெரிக்காவுக்குச் செல்லும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. நியூஜெர்ஸியில் 'பெட்னா' என்ற தமிழ் அமைப்பின் தலைவர் சிவராமன் வீட்டில் நான் தங்கியிருந்த போது, அவரது மனைவி ஜீவா சிவராமன் அவர்கள் ஒருநாள் என்னிடத்தில், "இன்றைக்கு பத்மினி அக்காவைப் பார்க்கப் போகலாமா?" என்று கேட்டார். நான் சற்றுத் திகைக்கவும், "நம்ம நடிகை பத்மினியைத்தான் பார்க்கப் போகிறோம்" என்று சொல்லி என்னை அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

போகும்போது "உங்களுடைய நகைச்சுவைப் பேச்சை 'வாங்க சிரிக்கலாம்' கேசட்டில் பலமுறை கேட்டிருக்கிறார்கள். உங்களைச் சந்திக்க வேண்டும் என்று என்னிடம் சொல்லியிருக்கிறார்கள்" என்று பேசியபடியே காரை ஓட்டிக் கொண்டுபோய் பத்மினி வீட்டில் நிறுத்தினார்கள்.

கதவு திறந்து. 'வாங்க வாங்க' என்ற முக மலர்ச்சியோடு, வணக்கத்தையே அபிநயமாகச் சொல்லியபடி இறங்கி வந்தார் பத்மினி. ஆண்டுகள் பல ஓடியிருந்தாலும் முகமும் கண்களும் கைகளும் இளமையும் துள்ளலுமாக எதிரே வந்து நின்று, 'நலந்தானா? உடலும் உள்ளமும் நலந்தானா?' என்று எங்களைப் பார்த்து அவர் கேட்டபோது மகிழ்ச்சியில் நாங்கள் மெய்மறந்து போனோம்.

நடிப்பும், நாட்டியமும் மட்டுமல்லாது, நகைச்சுவை உணர்வும் பத்மினி அவர்களிடத்தில் மிகுந்திருப்பதை, நாங்கள் பேசிக் கொண்டிருந்த சில நிமிடங்களில் என்னால் உணர முடிந்தது.

"பழைய படங்களில் உங்களால் மறக்க முடியாத, சின்ன வேஷங்களை ஏற்ற சாதாரண நடிகர்களைப் பற்றிச் சொல்ல முடியுமா?" என்று நான் கேட்டேன்.

"இதென்ன நிருபர் மாதிரி கேக்கறீங்க? ஆனாலும் இது நல்ல கேள்வி. பொதுவா எல்லாரும் பெரிய நடிகர், நடிகைகளைப்

# நலந்தானா?

பத்தித்தான் கேப்பாங்க, இருங்க சொல்றேன்'' என்றவர், சற்று யோசித்து ''ராஜா ராணி என்று ஒரு படம் வந்ததே பாத்தீங்களா?'' என்று என்னிடத்தில் கேட்டார்.

''பல தடவை பாத்திருக்கேன். இப்பக் கூட இந்தியத் தொலைக்காட்சிகளில் முதன் முறையாகன்னு மூணு தடவை பார்த்திருக்கேன். நடிகர் திலகமும், நீங்களும் நடிச்ச படம். எஸ்.எஸ்.ராஜேந்திரன் வில்லன் மாதிரி வருவாரு. கலைஞர் கருணாநிதி கதை, வசனம். கலைவாணர், டி.ஏ.மதுரம் சேர்ந்து 'சிரிப்பு இதன் சிறப்பைச் சீர்தூக்கிப் பார்ப்பதே நமது பொறுப்பு'ன்னு மருதகாசியோட பாடலைச் சிரிக்கச் சிரிக்கப் பாடி இருப்பாங்க...''

''அம்மாடி, இதென்ன விட்டா படத்தையே ஒப்பிச்சிருவீங்க போலிருக்கே'' என்று வியந்தவர், ''அந்தப் படத்தில் எனக்கு அப்பாவா வந்தவர் 'அப்பா' துரைசாமி. பல படங்களில் எனக்கு அப்பாவா நடிச்சிருக்காரு. கண் தெரியாதவரா, நோயாளியா, மூணாவது சீன்ல செத்துப் போறவரா, இப்படிப் பல படங்கள்ல அவர் நடிச்சிருக்காரு. நடிக்க வர்றப்ப கூடவே ஒரு கயித்துக் கட்டிலும் கிழிஞ்ச பாயும் கொண்டு வந்திருவாரு... எனக்கு அவரைப் பார்த்ததுமே கண்ணீர் வந்துரும்'' என்று சொல்லி கண்ணீர் வரச் சிரித்தார்.




 கு.ஞானசம்பந்தன்

# சினிமாவுக்குப் போகலாம் வாங்க!




"சம்பூர்ண இராமாயணத்தில் என்.டி. ராமாராவோடு, சீதையா நடிச்சிங்களே, அவருக்கு நல்லா தமிழ் பேசத் தெரியுமா?" என்று நாங்கள் கேட்டபோது,

"அப்பல்லாம் அவருக்கு அவ்வளவா தமிழ் பேசத் தெரியாது. அந்தப் படத் தயாரிப்பாளரும் டைரக்டர் ஏ.பி.நாகராஜனும் சேர்ந்து என்.டி.ராமாராவுக்குத் தமிழ் சொல்லிக் கொடுக்க ஒரு தமிழ் ஆளை ஏற்பாடு செஞ்சிருந்தாங்க. பத்து நாள் ஆச்சு. போன ஆளு நல்லா தெலுங்கு பேச ஆரம்பிச்சிட்டாரு. அது மட்டுமில்லை, அந்தப் படம் புராணப் படம்ங்கிறதால ஒகேனக்கல்ல எடுத்தாங்க. சீதையும் ராமனும் ஒரு பாறையில் உட்கார்ந்திருக்கிற மாதிரி ஒரு சீன். நல்ல வெயில். பாறை சூட்டில் உட்கார முடியல. ராமனா நடிச்ச என்.டி.ராமாராவோ சீதே... சீதே...ன்னு ஒவ்வொரு வரியா வசனம் பேசப் பேச... அன்னிக்கு நான்பட்ட கஷ்டம் அந்த சீதைகூடப் பட்டிருப்பாளான்னு எனக்குத் தெரியலை" என்று பத்மினி அவர்கள் பேசப் பேச, அந்த அறையே சிரிப்பொலியால் நாட்டியமாடியது.

அந்தக் காலத் தயாரிப்பாளர்கள், கதாநாயகர்கள், இசையமைப்பாளர்கள், நாட்டிய ஆசிரியர்கள் என்று எங்கள் பேச்சுத் தொடர்ந்தது.

ஒரு பாடலைப் பற்றிச் சொல்லும் போது பாடிக்காட்டியும், கண்களாலும், கைகளாலும் அபிநயம் பிடித்துக் காண்பித்தும் அவர் காலத்துக் காட்சிகளைக் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்தியதைப் பார்த்தபோது, அவர் நம் தமிழ்த் திரையுலகில் மீண்டும் நடிக்க வந்து இன்னொரு சுற்று வருவார் என்ற நம்பிக்கை எனக்கு வந்தது.

பேச்சுக்கிடையில், "நீங்கள் எப்போது ஊருக்குப் போகப் போகிறீர்கள்?" என்று என்னிடத்தில் கேட்டார் பத்மினி.

"நாளை ஃபிலடெல்பியா போகப் போகிறேன். அங்கே செயின்ட் ஜோசப் பல்கலைக்கழக வளாகத்தில் தமிழ்ச் சங்கக் கூட்டம் இருக்கிறது. அதை முடித்துவிட்டு, புதுக் கவிதைகளுக்கு அடித்தளம் இட்ட அமெரிக்கக் கவிஞர் 'வால்ட் விட்மன்' வாழ்ந்த வீட்டைப் போய்ப் பார்க்க வேண்டும். நம் மகாகவி பாரதி 'வால்ட்விட்மனை'ப் பற்றி அதிகம் எழுதியிருக்கிறார். அவருடைய 'புல்லின் இதழ்கள்' எனும் கவிதைத் தொகுப்பு, பழைய பிரதி கிடைத்தால் வாங்க வேண்டும்" என்று சொன்னேன்.

"சரி போய் வாருங்கள். இன்னும் இரண்டு நாட்களில் நடிகை ராஜசுலோசனா இங்கே வருகிறார். அவரையும் நீங்கள் பார்த்துப் பேசலாமே" என்று பத்மினி சொன்னவுடன் அவ்வாறே செய்வதாகச் சொல்லிவிட்டு, ஜீவா சிவராமன் அவர்களும் நானும் விடை பெற்றுக் கொண்டு, காரில் புறப்பட்டோம்.

*(ரீல் சுற்றும்)*

**படம் : புதூர் சரவணன்**

- மணிரத்னத்தின் அடுத்த தமிழ்ப்பட கதாநாயகர்கள் பட்டியலில் இவரது பெயரும் உண்டு...
- 'சாந்துப் பொட்டு' படத்தைத் தானே தயாரிக்கலாமா என்று யோசித்து வருகிறார்...
- குடும்பத்தோடு வெளிநாடு செல்வதுதான் இவரது ரிலாக்சேஷன்.

ENJOY POURNAMI (FULLMOON NIGHT) AT MANASAROVER

# திருக்கயிலாயம்-மானஸரோவர்-முக்திநாத்

8-ம் ஆண்டு புனித யாத்திரை புறப்படும் மாதங்கள் **ஆகஸ்ட், செப்டம்பர்-2006**

சென்னையிலிருந்து இரயில் மூலம் காட்மண்டு சென்று, அங்கிருந்து டயோட்டா கார் மூலம் திருக்கயிலாயம் சென்று தரிசித்து, பின் இரயில் மூலம் சென்னை வருவதற்கு 20 நாட்கள் ஆகும். இரயில் கட்டணம் உட்பட (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) **ரூ.52,900/-** மட்டுமே.

டெல்லியிலிருந்து விமானத்தில் காட்மண்டு சென்று, அங்கிருந்து டயோட்டா கார் மூலம் திருக்கயிலாயம் சென்று தரிசித்து, பின் விமானம் மூலம் டெல்லி வருவதற்கு 16 நாட்கள் ஆகும். விமான கட்டணம் உட்பட (சூப்பர் டீலக்ஸ் வசதியுடன்) **ரூ.56,900/-** மட்டுமே.

சென்னையிலிருந்து டெல்லி வரை விமானம், ரயிலில் சென்று வர தங்கள் வசதிக்கு ஏற்ப ஏற்பாடு செய்து தரப்படும்.

சிவாச்சாரியார்கள், திருமறை ஓதுபவர்கள், டாக்டர்கள் மற்றும் குருப்பாக வருபவர்களுக்கு கட்டணத்தில் சலுகை. பாஸ்போர்ட் மிக அவசியம். பாஸ்போர்ட் இல்லாதவர்களுக்கு ஏற்பாடு செய்து தரப்படும்.

**தென்னிந்தியாவில் இருந்து சிவ பக்தர்களை அதிகமாக அழைத்து செல்லும் அனுபவமிக்க ஒரே நிறுவனம்**

## திருக்கயிலாயம், மானஸரோவர், முக்திநாத் திருப்பயணத்தின் சிறப்பம்சங்கள்

♦ மானஸரோவரில் கயிலைநாதர்முன் துறவியரைக்கொண்டு சிறப்பாக பூஜை, ஹோமம் செய்யப்படும் ♦ மானஸரோவரில் வேணி தானம், தாம்பத்ய பூஜை, முன்னோர் வழிபாடு (திதி) வஸ்திரதானம், ஜலதீபம் ஏற்றவும் ஏற்பாடு செய்யப்படும். ♦ ஒரு ஜீப்பில் (New Jeep) 4 அன்பர்களை மட்டுமே அழைத்துச் செல்கிறோம் ♦ திருக்கயிலை திருப்பயணம் வீடியோ எடுக்கப்படும் ♦ யாத்திரை காலம் முழுவதும் அனுபவமிக்க ஆசாரமான பிராமணாள் உணவு ♦ மருத்துவ உதவி ♦ குளிருக்கு ஏற்ற பாதுகாப்பான தங்குமிடங்கள் (Mud Houses) ♦ உயர்மட்ட அழுத்தத்திற்கேற்றபடி அதிக நாட்கள் தங்கிச் செல்லுதல் ♦ சென்னையிலிருந்து, திருக்கயிலாயம் சென்று வலம் வந்து திருக்கயிலைநாதனை தரிசித்து ஊர் திரும்பி வரும்வரை நாங்கள் கூடவே இருந்து சிறப்பான சேவை செய்கிறோம்.



TO GET BEST SERVICE TRUST THE SPECIALIST

**ஸ்ரீ அன்னபூரணி யாத்ரா சர்வீஸ்**

(Specialist in Holy Mt.Kailash - Manasarovar & Mukthinath Yatra)
68, நடுத்தெரு, மயிலாப்பூர், சென்னை - 600 004.

**Cell : 93400 22233 / 92822 26230**



SPECIAL CARE FOR SENIOR CITIZENS

# நீங்கள் கேட்டவை

● செ. பொன்ராஜ்பாண்டி,

மதுரை - 16

? 'குடிசைகளுக்கு வழங்கப்படும் இலவச கலர் டி.விகளுக்கு இலவச மின்சாரம்' என்று ஏழைகளுக்கு இன்ப ஷாக் அளித்துள்ளாரே ஆற்காடு வீராசாமி?

• சீரியஸ் யோசனை



• சீரியல் தவறுகள்...

! 'ஒரு பொய்யை மறைக்க நூறு பொய் சொல்ல வேண்டும்' என்பதுபோல, ஒரு தவறை நியாயப்படுத்த ஆரம்பித்தால் நூறு தவறுகள் தொடரும்! இப்போது இலவச மின்சாரம்; நாளைக்கு கேபிள் கனெக்ஷன், பிறகு செட்டாப் பாக்ஸ்; அப்புறம் டிவி பழுதானால் ரிப்பேர் செலவு, அதன் பிறகு பழசானால் புதுப்பித்தல்... எத்தனை தவறுகள் - செலவுகள் பாக்கி இருக்கு எதிர்காலத்தில்!

● டி.முருகேசன், திருவாரூர்

? பெப்ஸி, கோக் இனி அவ்வளவுதானா?

! 'அவ்வளவுதானா?' என்று நீங்கள் கேட்க, 'இவ்வளவுதானா?' என்று அரசியல்வாதி வினவ, 'எவ்வளவு?' என்று கோக்-பெப்சி நிறுவனங்கள் விசாரிக்க, தடை உத்தரவு தடுமாறும்! மக்கள் விளம்பரங்களில் மயங்கி இப்பானங்களுக்கு அடிமைப்பட்டுப் போவது தொடரும்.

● சுப்புலட்சுமி சிதம்பரம்,

ஸ்ரீவில்லிபுத்தூர்

? திறமையான, அறிவுள்ள, அழகான மனைவி; ஆனால் மலடி. தரமான கல்கியில் சரித்திரத் தொடர் இல்லாதது மலடி போல்-வெளியிடாதது ஏன்...?

! சரித்திரக் கதை சிறப்பாக அமைந்தால் மகிழ்ச்சியோடு பிரசுரிக்கத் தயாராக இருக்கிறோம். நிற்க, குழந்தை பிறந்தால்தான் ஒருத்தி முழுமையான பெண் என்ற உங்கள் கருத்து, சரித்திர காலத்தில் ஏற்புடையதாக இருந்திருக்கலாம்; இன்றைக்குச் சரிப்பட்டு வராது. மாற்றிக்கொள்வது நல்லது. இன்னொன்று... கேள்வி சுப்புலட்சுமி எழுதியதுதானா? அல்லது அவர் பெயரில் சிதம்பரம் எழுதியதா? யாராயிருந்தாலும் ஆத்ம சோதனை தேவை.

● அ.கஜைறல் ரஹ்மான்,

திருச்சி - 21

? 'பள்ளி - கல்லூரிகளில் அனைத்து மாணவர்களுக்கும் கட்டாய என்.ஸி.ஸி. பயிற்சி அளிக்க வேண்டும்' என்று ஜனாதிபதி கலாம் யோசனை தெரிவித்துள்ளாரே?

! இது மட்டுமா? இன்னும் எத்தனையோ நல்ல யோசனைகளை அவர்



• டென்ஷன்... • ...தொலைந்தது!

கூறிக்கொண்டுதானிருக்கிறார். கேட்டு நடப்பவரைத்தான் தேடிக் கொண்டிருக்கிறோம்.

● வாசுதேவன், நவிமும்பை ❑

? தற்பொழுது தெருவுக்குத் தெரு, மூலைக்கு மூலை ஜிம்கள் அதிகமாகி

வைப் பற்றிக் கேட்டால் சூர்யா டென்ஷன் ஆகிவிடுகிறார்?

! இனி டென்ஷனாக மாட்டார். அப்பாவின் ஆசியுடன் கல்யாண தேதி அறிவிக்கப்பட்டு விட்டதே; தமிழ் மக்களின் மிகப் பெரிய கவலை தீர்ந்தது! ஹலோ, சனகன்... அடுத்த காதல் கிசுகிசு யாரைப் பற்றி...?

● கி.துரைசாமி, மங்களப்பட்டி

? தலையங்கத்தில் வருவது ஆசிரியரின் கருத்தா? வாசகர்களுடைய எண்ணப் பிரதிபலிப்பா?

! இரண்டுமே அல்ல; பத்திரிகையின் குறிக்கோள் / கொள்கைக்கு உட்பட்ட ஆசிரியரின் சிந்தனையின் அடிப்படை

# பெப்ஸி - கோக் இனி அவ்வளவுதானா?

வருகின்றனவே?

! வீதிக்கு வீதி பிட்ஸா, சிப்ஸ், சிக்கன், பிரியாணி, இட்லி வடை, ஸ்வீட், சூப், சுண்டல் என்று மூன்றில் ஒரு கடை மூக்கைப் பிடிக்கச் சாப்பிடுவதற்கான இடமாக இருந்தால், தெருவுக்குத் தெரு, மூலைக்கு மூலை 'ஜிம்'தானே வந்தாக வேண்டும். அங்கேயெல்லாம் 'ஜம்'மென்று வியாபாரம் நடக்க நடக்க, இங்கெல்லாம் 'ஜில்'லென்று ரேட்டும் ஏறும்!

● என்.அண்ணாதுரை, கடம்பத்தூர் ❋

? காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை சூர்யா - ஜோதிகா காதல் தெரிந்திருக்கிறது. பிறகு ஏன் ஜோதிகா



• கோழி...



• ... மிதித்தது!

யில்தான் தலையங்கம் எழுதப்படுகிறது. பத்திரிகையின் குறிக்கோள் ஆசிரியருக்குச் சம்மதம் இல்லையெனில் விலகலாம்; தலையங்கக் கருத்து வாசகர்களுடன் உடன்பாடு இல்லையெனில் எழுத்து மூலம் வாதங்களை எடுத்து வைக்கலாம்.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? சௌரவ் கங்குலி ஒரு 'பச்சா' (கைக்குழந்தை) என்கிறாரே ஜக்மோகன் டால்மியா?

! அதனால்தான் நேற்று வரை இடுப்பில் தூக்கி வைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தார் போலும். ஆனாலும் கோழியும் குஞ்சும்

இப்படி மிதித்துக்கொள்ள வேண்டாம்.

● ஆர்.எம்.ஈ.மலை,
அக்ரஹாரம் அஞ்சல்

**? தமிழக சட்டமன்றத்தில் எதிர் கட்சித் தலைவர் ஜெயலலிதாவின் செயல்பாட்டுக்கு எத்தனை மதிப்பெண் தரலாம்?**

! அட்டென்டன்ஸுக்கு, பேச்சுக்கு, புள்ளி விவரங்களுக்கு, தர்க்க வாதங்களுக்கு டிஸ்டிங்ஷன்.... பொறுமை, சகிப்புத்தன்மை, எதிர்தரப்பு பேச்சுக்கு உரிய கவனம் தருவது ஆகியவற்றுக்கு ஃபெயில் மார்க்! 200க்கு 200 எதிலும் கிடைக்காது!

● கன்னிக்கோவில்
இராஜா, சென்னை-18

**? காவிரியை இழந்தது போல முல்லைப் பெரியாறு அணையையும் இழக்கத்தான் வேண்டுமோ?**

! நீதிமன்றத் தீர்ப்புகளை மதிக்காமல் அரசியல் நடத்தும் அரசியல்வாதிகள் வெள்ளமெனப் பெருகி வருகிறார்கள். முதலில் இதற்கு அணைபோட வேண்டும்.

● ஆர்.கே.லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்

**? தமிழக அரசின் ஆக்கபூர்வமான பணி என்று எதைச் சொல்லுவீர்கள்?**

! தமிழக எல்லைக்குள் இடமில்லாததால் ஆந்திரப் பிரதேச தடா பகுதிக்குத் தொழிலகங்கள் இடம்மாறும் போக்கை முறியடிக்க, அம்பத்தூர் தொழிற்பேட்டையை விஸ்தரிப்பதற்கு எடுக்கப்பட்டுள்ள முயற்சி.



• "ஸாரி, தெரியாம..."



• நிழல் அதிகாரம்

● ரேவதிப்ரியன், ஈரோடு

**? ஜூனியர் விகடன் கைமாறிவிட்டது என தாம் கூறியதற்கு மன்னிப்பு கேட்டுள்ளாரே வைகோ - ஒரு நல்ல அரசியல்வாதிக்கு அழகு இதுதானே?**

! ஊஹூம்! 'கைமாறி விட்டது' என முன்பு தாம் நம்பியதற்கான காரணங்களை அவர் கூறியுள்ளார். அவை படு பலவீனமாக இருப்பதால் அவற்றை நம்ப முடியவில்லை. எனவே இன்று அவர் மன்னிப்புக் கேட்பதையும் சீரியஸாக எடுத்துக்கொள்ள முடியவில்லை.

● ஆர்.பிரகாஷ்,
பொன்மலை

**? தமிழகத்தில் மீண்டும் லாட்டரிச் சீட்டுக்கு அனுமதி கிடைக்காது என்று ராமதாஸ் கூறுகிறாரே?**

! ஒரு நல்ல விஷயத்தில் ராமதாஸ் உறுதியாக இருப்பது குறித்து மகிழ்ச்சி. ஆனால் அவர் பேசியிருக்கும் விதம் 'யார் முதல்வர்' என்று சிந்திக்க வைப்பதாக இருக்கிறது!

● எஸ்.கௌரிலக்ஷ்மி,
ஸ்ரீரங்கம்

**? தமிழில் பெயர் வைத்தால் முழு வரிவிலக்கு என்றால், திரைப்படங்கள் மூலம் வரும் கேளிக்கை வரியை இழக்க அரசு தயாரா?**

! சினிமா தலைப்புகளைத் தமிழில் வைப்பதால் தமிழுணர்வு வந்துவிடுமா? வளருமா? தலைப்பைத் தமிழாக்கிவிட்டு, கதை - வசனம் - பாடல்களில் தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும் கொலை செய்தால் என்ன பண்ணுவது? அரசுக்கு வரிப்பணம் நஷ்டமாவதுதான் மிச்சம்!

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:
வாசுதேவன்,
எக்ஸெல் ரெஸிடென்ஸி,
ஃப்ளாட் 604, ஆறாவது மாடி,
செக்டார் 7, அய்ரோலி,
நவி மும்பை - 400 708

• ரூ.50/- பரிசு பெறுபவர்:
என். அண்ணாதுரை,
பி.ஜி.அஸிஸ்டன்ட்,
அரசு உயர்நிலைப் பள்ளி,
கடம்பத்தூர்,
திருவள்ளூர் மாவட்டம் - 631 203

பாமர மக்களை அரசின் இலவசங்களுக்காக கையேந்த வைப்பது ஆரோக்கியமான வளர்ச்சியல்ல என்பதை தலையங்கம் உணர்வுபூர்வமாக பிரதிபலித்தது.

- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

லெபனானில் என்னதான் நடக்கிறது எனப் புரியாமல் நாங்கள் இருந்த நேரத்தில், மூன்றாம் உலகப் போருக்கு முயற்சிக்கிறதா இஸ்ரேல் கட்டுரை தெளிவாக விளக்கியது.

- எஸ்.பாலசந்தர், திருவாரூர்

ஏவி.எம். போன்ற உயர்ந்த மனிதர்கள் இன்று மிகவும் குறைந்துவிட்டதை உணர்த்தியது ராஜேந்திரனின் எழுத்து.

- ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

ஆளுங்கட்சியாக இருந்து பதவி கொடுத்தால் தலைவரைப் புகழ்வது, பதவி பறிக்கப்பட்டால் தலைவரை தரையில் போட்டு மிதிப்பது... ம், சேடப்பட்டி முத்தையாவும் சோடை போகவில்லை!

- பி.ஜெயப்பிரகாஷ், பொள்ளாச்சி

சானியா மிர்சா கலைத் துறைக்கு வந்தால் அழகான நாயகி கிடைப்பார். ஆனால் விளையாட்டுத் துறைக்கு நல்ல திறமைசாலி கைநழுவிப் போனதாக அமைந்துவிடும்.

- ஆர்.குமாரசுப்பிரமணியன், நாகர்கோவில்

நூலகம் பற்றிய இந்திரா பார்த்தசாரதியின் விமர்சனம் நூற்றுக்கு நூறு உண்மை!

- இரா.சக்கரபாணி, மதுரை

மனோரஞ்சிதம் க.பாபுவின் 'உண்மை' முதல் பரிசு பெற்ற சிறுகதை, ஒரு பொய்யை எவ்வாறு வலிமையுடன் மெய்யாக்க முயற்சி செய்கிறார்கள் என்பதை அழகாக வலியுறுத்தியது. பாராட்டுகள், தரமான தேர்வுக்கு.

- ஜே.துரைராஜ், சென்னை

சூர்யாவின் பேட்டி தன்னடக்கம், தன்னம்பிக்கையுடன், இயற்கையாகவும் இருந்தது.

- ஜானகிராம் அந்தோணி, திருநெல்வேலி

பட்டுக்கோட்டை பிரபாகரின் 'ம்' தொடர்கதையில் மயில்பட்டியின் காலைக் காட்சிகளும் இயற்கை வர்ணனையும் மனதை வருடின.

- வி.திலகம், திருநெல்வேலி



## விமர்சனம்

**ச**ண்டைச் சேவல் விஷால், ரீமாசென் மீண்டும் ஜோடி சேர்ந்திருக்கும் படம். கூடவே எஸ்.எஸ்.மியூசிக் ஸ்ரேயா. மூன்று இளமைகளை வைத்து எவ்வளவு கலர் ஃபுல்லா கொடுத்திருக்கலாம்? ப்ச்!

மதுரையில் கந்துவட்டி, ரௌடியிஸம் செய்யும் கும்பலில் மருத்துவக் கல்லூரி மாணவன் குறுக்கிட, அதனால் ஏற்படும் துரத்தல், பழிவாங்கல், அடிதடிதான் கதை. இன்னொரு ரௌடிப் படம். ஒரு வித்தியாசம், இதில் ஹீரோயினை ரௌடியாக்கி இருக்காங்க. விஷால் இன்றைய ஹீரோக்களின் இலக்கணப்படி அடித் தொண்டையில் கத்தி, வில்லன்களிடம் சவால் விடுகிறார். ரீமா வழக்கம்போல் ஹீரோவைக் காதலித்து மூன்றுப் பாடல்களில் ஆடுகிறார்.

ஸ்ரேயா பொம்பளை தாதா. வித்தியாசமா கேரக்டரை உருவாக்க நினைச்சிருக் காங்க... ஆனா ஓவர்டோஸ்! பல பேருக்கு முன்னாடி தன்னை எதிர்த்துப் பேசி மேல கையை வெச்சுட்ட விஷாலை, 'நீதான்டா என் புருஷன். வர்ற வெள்ளிக்கிழமை




# திமிரு

நமக்குக் கல்யாணம். என் கழுத்துல தாலி கட்ட வைக்கறேன்'னு சவால் விடறாங்க. அதுக்காக விஷாலோட பெத்தவங்களை பணயமா வெச்சுட்டு கல்யாணக் கோலத்துல கையில தாலியோட நிக்கறது வெறுப்படிக்குது.

வடிவேல் சார், உங்களுக்கு வேணும்னா அடி வாங்கறது அலுக்காத விஷயமா இருக்கலாம். எங்களுக்கு அலுப்பா இருக்கு. இசை, யுவன்சங்கர் ராஜா. 'மானாமதுரை' பாடல் தாளம் போட வைக்குது. விஜயனோட எடிட்டிங்ல வேகம் இருக்கு.

விஷால் சும்மா வெளிய வந்தாலே பாதுகாப்புக்கு வர்ற போலீஸ், அவர் பஸ் ஸ்டாண்டுலயும் காம்ப்ளக்ஸ்லயும் அரை மணி நேரமா சண்டை போடறப்ப எங்க போனாங்கன்னே தெரியலை. இப்படி சில இடங்கள்ல நிறைய லாஜிக் உதைக்குது. ரௌடிப் படங்கள் வராம இருக்க கூட்டுப் பிரார்த்தனை செய்யறதைத் தவிர வேற வழி தெரியல.

# அரண்

**பா**கிஸ்தான் தீவிரவாதிகளை ஹீரோ(க்கள்) கூண்டோடு அழிக்கற கதை. காஷ்மீரைக் கைப்பற்றுவதற்காக இந்தியாவைத் துண்டாட நினைக்கிறாங்க முகமூடி அணிந்த தீவிரவாதிங்க. இதை வேரோடு பிடுங்க முயற்சி செய்றாங்க மிலிட்டரியைச் சேர்ந்த கமாண்டர் மோகன்லாலும் அவரது சகாவான ஜீவாவும். இயக்குநர் மேஜர்ரவி ராணுவத்தில் பணியாற்றினவர்ங்கறதால சண்டைக் காட்சிகள்ல அப்படியொரு நேர்த்தி. அப்படியொரு புதுமை.

இராணுவத்தினரின் சாகசங்கள் கண்முன்னே விரியும் பிரமிப்புதான் படம் முழுக்க. திருவின் கேமரா காஷ்மீரின் அழகை அள்ளியிருக்கு. அதிலும் இந்திய இராணுவத்துக்கும் ஆப்கானிஸ்தான் தீவிரவாதிகளுக்குமான அந்தக் கால் மணி நேர யுத்தம் ஏ-ஒன்.

மோகன்லால் சொந்தக் குரல்ல பேசியிருந்தா நடிப்பின் கம்பீரத்தோடு, கதாபாத்திரமும் மனசுல நின்னிருக்கும். மோகன்லால் வர்ற காட்சிகளெல்லாம் மலையாளப் படத்துக்காக எடுக்கப்பட்டு, அப்புறம் டப்பிங் பண்ணாங்கன்றதால காட்சில



முழுவதுமா ஒன்றிப் போக முடியல. ஜீவா நல்ல துறுதுறுப்பு. பாவம் கோபிகா.

சுவாரஸ்யமா காட்சிகளைத் தொகுக்கறதுல எடிட்டர் இன்னமும் கவனம் செலுத்தியிருக்கணும். இராணுவத்தின் சாகசங்களைக் காட்டுற கதைக்கு எதற்கு ரகசியாவும் அவரோட அடியொற்றிகளும்? இதில் சம்பந்தப்பட்ட ரகசியா, ரமேஷ் கண்ணா, கஞ்சா கருப்பு எல்லாருமே கண்டனத்துக்கு உரியவங்க. கோபிகா-ஜீவா காதலிலும் கல்யாணத்திலும் எந்த மலர்ச்சியும் இல்லை. ஏதோ இருவேறு படங்களா காட்சிகள் அந்நியப்படுது.

திரைக்கதையில் செய்நேர்த்தி இருந்திருந்தா படத்துக்கு மேலும் கம்பீரம் கூடியிருக்கும். ஆனாலும் படம் முடிஞ்சு எழும்போது இந்திய இராணுவத்து மேலருக்குற மதிப்பு இன்னும் பல படிகள் உயர்ந்திருக்கறதை மறுக்க முடியாது.

- லஜ்ஜாவதி

**துரைமுருகனின் உடல்நல பாதிப்பால் அவரது பொதுப்பணித் துறையையும் கூடுதலாகக் கவனிக்க வேண்டிய நிலை உயர்கல்வித் துறை அமைச்சர் பொன்முடிக்கு. எப்போதும் பிஸியாக இருப்பவரை ஒரு மாலை வேளையில் சந்தித்தோம்.**

**தி.மு.க. அரசு பதவியேற்ற இந்த மூன்று மாத காலத்தில் உயர்கல்வித் துறையில் என்ன சாதித்திருக்கிறீர்கள்?**

"கல்வியாண்டு துவங்கும் நெருக்கத்தில்தான் கலைஞர் அரசு பதவியேற்றது. சென்ற ஆட்சியின்போது பொறியியல், மருத்துவம் தொடர்பான அட்மிஷன் விவகாரத்தில் ஏகப்பட்ட குழப்பங்கள். இந்த முறை அதுபோன்ற பிரச்னைகள் ஏதும் வரக்கூடாது என்று தனியார் கல்லூரிகள் மற்றும் சிறுபான்மையோர் நடத்தும் கல்லூரிகள் ஆகியவற்றோடு பேச்சு நடத்தினோம். தனியார் கல்லூரிகளில் 65 சதவிகிதம் அரசு கோட்டாவாகவும், 35 சதவிகிதம் மட்டுமே நிர்வாகக் கோட்டா என்றும் முடிவு செய்யப்பட்டது. சிறுபான்மையோர் நடத்தும் கல்லூரிகளில் மட்டும் அரசு கோட்டா 50 சதவிகிதம். அதேபோல உயர்கல்வி கவுன்ஸில் அமைப்பதற்கு உறுப்பினர்கள், செயலாளர் மற்றும் தலைவர் பொறுப்புக்கு நான்கு

# மணல் குவாரிகளில் புதுக்கொள்ளை!

வருடங்களாக ஆட்களைப் போடாமல் இருந்தார்கள். பல்கலைக்கழகங்கள் மற்றும் பல்கலைக்கழக மான்ய கமிஷன் ஆகியவற்றோடு தொடர்புகொண்டு செயல்பட வேண்டிய அமைப்பு இது. இப்போது ஆட்களைப் போட்டிருக்கிறோம். மேலும் ஆயிரம் பேராசிரியர்கள் நியமிக்கப்பட இருக்கிறார்கள். முதல்வர்கள் இல்லாத அரசுக் கல்லூரிகளுக்கு முதல்வர்களை நியமித்துக் கொண்டிருக்கிறோம்."




**உயர்கல்விக்கென்று தனித்துறை அவசியம்தானா?**

"இது காலத்தின் கட்டாயம். பல்கலைக்கழகங்களும், தொழிற் கல்லூரிகளும் அதிகமாகிக்கொண்டே வரும் இந்தக் கட்டத்தில், அவை தொடர்பான பிரச்னைகளுக்குத் தீர்வுகாண ஒரு தனித்துறை அவசியமே!"

**தி.மு.க. ஆட்சிக்கு வந்தாலே மணல் விலை உயர்ந்துவிடும் என்று பேச்சிருக்கிறதே!**

"அரசே மணல் வியாபாரத்தை ஏற்று நடத்துவது என்பது நல்ல கொள்கைதான். ஆனால் அந்தக் கொள்கையை, துஷ்பிரயோகம் செய்து மணல் கொள்ளைக்குத் துணை போயிற்று ஜெ. அரசு. நடந்து வந்த தில்லுமுல்லுகள் சரிசெய்யப்பட்டு

**"மணல் விலை இன்னமும் குறைய வாய்ப்பிருக்கிறது!"**

விட்டன. யாருடைய தயவும் தேவையில்லாமல், வரைவோலை (DD) கொடுத்தால் குவாரிகளில் மணல் கொடுக்கிறார்கள். அரசு வருமானமும் உயர்ந்திருக்கிறது. 2005 ஜூலையில் ஏழு கோடிதான் வருமானம். இப்போது 17 கோடி வருமானம் வந்திருக்கிறது."

**950 ரூபாய்க்கு அரசிடம் ஒரு லாரி லோடு (மூன்று யூனிட்) வாங்கி, 3000 ரூபாய்க்கு அதிகமாக விற்பது அநியாயம் இல்லையா?**

"போக்குவரத்து, ஆட்கள் சம்பளம், லாரி மெயின்டனன்ஸ் என்று நிறைய செலவு இருக்கிறது. இப்போது 24 மணி நேரமும் குவாரிகள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. மணல் இன்னமும் விலை குறையும் வாய்ப்பு இருக்கிறது."

**அரசுப் பெயருக்கு வரைவோலைகளை எடுத்து வைத்துக் கொண்டு, லாரிக்காரர்களிடம் கமிஷன் வாங்கிக்கொண்டு இந்த ரெடிமேட் வரைவோலைகளைக் கொடுத்துச் சிலர் கொள்ளையடிக்கிறார்களே?**

"இந்த டிடி. கொடுக்கும் வேலையை குவாரி உள்ள ஊர்க்காரர்கள் அராஜகமாகச் செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டோம். காவல்துறை தகுந்த நடவடிக்கை எடுக்கும்."

**சட்டசபையில் ஜெயலலிதாவையும் அ.தி.மு.க. உறுப்பினர்களையும் பேசவே விடாமல் குறுக்கீடு செய்கிறீர்களாமே?**



"2001 – 2006 ஜெயலலிதா ஆட்சியில் 15 நிமிடங்கள் பேசி முடிப்பதற்குள் 23 தடவை குறுக்கிட்டார்கள் ஜெயலலிதாவும், அ.தி.மு.க. அமைச்சர்களும். "முதல்வர் பேசியபிறகு நீங்கள் பேசுங்கள்" என்று சொல்வார் சபாநாயகர் காளிமுத்து. ஆனால் ஜெயலலிதா பேசிய பிறகு யாரும் பேசக்கூடாது என்று சொல்லி விடுவார். மைனாரிட்டி அரசு என்று மூச்சுக்கு மூன்று தடவை பேசினால் எப்படி குறுக்கிடாமல் இருக்க முடியும்!"

சந்திப்பு : **ப்ரியன்**
படம் : **ராஜன்**

## – பொன்முடி விளக்கம்

# அக்குபங்சர் சிகிச்சை ஆபத்தானதா?

**எ**ன்னதான் நவீன மருத்துவம் கொடி கட்டிப் பறந்தாலும் பாரம்பரிய மருத்துவ முறைகளுக்கு நம் மக்களிடம் என்றும் தனி மதிப்புண்டு. அதிலும் அக்குபங்சர் சிகிச்சை, பிரபலமான கொஞ்ச நாளிலேயே தனக்கென பிரத்யேகமானதொரு இடத்தை தக்கவைத்துக் கொண்டது. ஆனால் சமீபகாலமாக 'அக்குபங்சர் சிகிச்சையால் பெரும்பாலான வியாதிகள் குணமாவதில்லை. சரியானாலும் மறுபடியும் வந்துவிடுகின்றன. சொல்லப் போனால் இந்த சிகிச்சை முறை ஒரு விதத்தில் ஆபத்தானதும்கூட' என்று பேசப்படுகிறது. இது எந்தளவு உண்மை? சீனாவிலுள்ள ஷாங்காய் பல்கலைக்கழகத்தில் அக்குபங்சர் மருத்துவத்தில் சிறப்புப் பயிற்சி பெற்ற டாக்டர் எம்.என்.சங்கரிடம் பேசினோம்..



● டாக்டர் சங்கர்

"இந்தக் குற்றச் சாட்டு முழுக்க முழுக்கப் பொய்யானது. அக்குபங்சர் என்பது இன்றைக்கு இன்றியமையாத ஒரு பாரம்பரிய மருத்துவ முறை. ஏனைய மருத்துவங்கள் போலில்லாமல் நம்பகத்தன்மை வாய்ந்தது. பின் விளைவுகள் அற்றது. அலோபதியில் குணமாகாத பல பிரச்னைகள் அக்குபங்சரில் சரியாவது கண்கூடு. புழுதி வாரித் தூற்றுவதற்கென்றே உள்ள நம் ஆட்களை நினைத்தால் வருத்தமாக இருக்கிறது"

**அக்குபங்சர் சிகிச்சையின் அடிப்படை என்ன?**

"நம் உடலில் ஜீரண மண்டலம், ரத்த ஓட்ட மண்டலம் இருப்பதுபோல சக்தி ரேகை மண்டலமும் உண்டு. இதயம், சிறுநீரகம், கல்லீரல், மண்ணீரல், கணையம், பித்தப்பை போன்ற ராஜ உறுப்புகளுக்கும் தனித்தனி சக்தி ரேகை உண்டு. இந்தச் சக்தி ஓட்டங்களின் பாதையில் உண்டாகும் தடைகளே நோய்களாக வெளிப்படுகின்றன. தடையுள்ள இடத்தைக் கண்டறிந்து அதற்குரிய புள்ளியைத் தூண்டும்போது, சக்தி ஓட்டம் சீராகி உடல் நல்ல நிலைக்குத் திரும்புகிறது. இதுதான் அக்குபங்சரின் அடிப்படை."

**அக்குபங்சர் முறையில் நோய் எப்படி கண்டறியப்படுகிறது?**

"நாடிப் பரிசோதனை மூலம்தான். வலப்புற உள்ளங்கை, இடப்புற உள்ளங்கைக்குச் சற்றுத் தள்ளி மூன்று இடங்களில் நாடிகளை உணரலாம். இந்த மூன்று நாடிகளுக்குக் கீழே உள்ள அடுக்கின் ஆழத்தில் இன்னும் மூன்று நாடிகள் உண்டு. இவற்றைக் கவனித்தாலே போதும் பிரச்னைகளைத் துல்லியமாக உணரலாம். கண்கள், நாக்கு இவற்றினாலும் கண்டுபிடிக்கலாம். மற்றபடி எந்தவிதமான டெஸ்ட்டுகளும் தேவையில்லை."



**அக்குபங்சர் சிகிச்சையில் பயன்படுத்தப்படும் ஊசிகள் பற்றிக் கூறுங்கள்...**

"இந்த ஊசிகள் மிகப் பிரத்யேகமானவை. எஃகு, வெள்ளி, தாமிரம்...

ஏன், தங்கத்தில்கூட தயாரிக்கப்படுகின்றன. மயிரிழை போன்று மிருதுவானவை. குத்தும் போது வலி இருக்காது. மின் இணைப்புக் கருவிகள் மூலமாகவும் இந்த ஊசிகளை உடம்பில் குத்தலாம் என்றாலும் கைகளால் பதிப்பதுதான் மிகவும் நல்லது. ஒரு முறைக்கு மேல் இந்த ஊசிகளைப் பயன் படுத்தக் கூடாது."

**எப்படி சிகிச்சையளிக்கப்படுகிறது?**

"சதை, எலும்பு, நரம்பு என்று எந்த ஒரு பாகத்துக்கும் சேதாரமின்றி உடலின் உள்ளே உள்ள நாளங்களில் ஊசி பதிந்து, உணர்வுகளை உசுப்பி விடுவதுதான் முக்கிய நிகழ்வு. உடலுக்கு வெளியே இருக்கும் ஊசியின் வழியே மின்காந்த அலைகள் உடலினுள் புகுந்து அதிர்வுகளை உண்டாக்கி, பிரச்னைக்குரிய புள்ளி தூண்டப்படுகிறது."



**இம்முறையில் என்னென்ன நோய்களெல்லாம் குணமாகின்றன?**

"மூட்டு வலி, சர்க்கரை நோய், சோரியாசிஸ், நாள்பட்ட தலைவலி, பொடுகு, ஆஸ்துமா, நரம்பு சம்பந்தமான கோளாறுகள், எல்லாவிதமான வலிகள், இளநரை, முடிப் பிரச்னை, உடல் பருமன், பெண்களுக்கான மகப்பேறு சம்பந்தப்பட்ட நோய்கள் என்று அனைத்து விதமான பிரச்னைகளுக்கும் அக்குபங்சரில் நல்ல தீர்வு உண்டு.

கோபம், பயம், அழுகை, கவலை, டென்ஷன் போன்ற மனநோய்களுக்கும் எளிமையான சிகிச்சை அக்குபங்சரில் கிடைக்கிறது. பித்தப்பை கற்களை இரண்டே நாட்களில் கரைத்து மலத்துடன் வெளியேற்றுவது அக்குபஞ்சரில் மட்டுமே சாத்தியம்."

**சரி, ஏன் மக்கள் அக்குபங்சர் மருத்துவத்தை நாட வேண்டும்?**

"ஏனெனில் அது தனித்தன்மை வாய்ந்தது. அலோபதியில் நிரந்தர நிவாரணம் என்பது சிம்ம சொப்பனம். ஆனால் அக்குபங்சரில் அப்படி இல்லை. சொல்லப்போனால் அக்குபங்சரில் ஒரு நோய் தீர்க்கப்படும் போது, கூடவே வரவிருக்கும் நோய்களும் குணமாகின்றன. பிரச்னைக்கான மூல காரணத்தை வேரோடு அழிக்கிறோம். மற்ற மருத்துவமுறைகள் போல் அப்போதைக்கப் போது சிகிச்சை செய்து விட்டுவிடுவதில்லை."

**அக்குபங்சரின் பூர்வீகம் இந்தியா. ஆனால் சீனா போன்ற நாடுகள் தானே இந்த மருத்துவத்தில் சிறப்புற்று விளங்குகின்றன?**

"அதை வேதனையோடு ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அக்குபங்சர் என்றில்லை, நம் நாட்டு பொக்கிஷங்களான பல விஷயங்கள்மீது நம்மவர்களுக்கு அக்கறையே இல்லை. அதனால்தான் நம் சொத்தை நம்மைத் தவிர யார் யாரோ நன்றாக அனுபவிக்கிறார்கள். என்றாலும் இந்தியாவிலும் இப்போது அக்குபங்சரின் மகத்துவம் மக்களுக்குத் தெரிய ஆரம்பித்திருக்கிறது. இப்போதுகூட 'Drugless Medicine for the Humanity' என்கிற தலைப்பில் உரையாற்ற இந்தியாவிலிருந்து சிறப்பு அழைப்பாளராக லண்டன் சென்று வந்தேன். நமது மருத்துவத்தை அயல்நாட்டினர் எப்படி மதிக்கின்றனர் என்பதற்கு இதெல்லாம் சான்று. நம் மக்களும் நமது பாரம்பரிய மருத்துவத்துக்குத் திரும்ப வேண்டும்."

- ஜெ.ராம்கி



• முருகையன்

பத்திரமாக பாதி கிணறு தாண்டியிருக்கிறார்கள். திமுகவை ஆட்சிக்கட்டிலில் அமர வைத்த இலவச டி.வி. திட்டம் செப்டெம்பரில் செயல்பாட்டுக்கு வருகிறது. இரண்டு ரூபாய் அரிசி திட்டம் சாத்தியமென்று சொன்ன மத்திய நிதியமைச்சர்கூட ஏகப்பட்ட கோடி செலவாகும் இலவச டி.வி. பற்றி வாய் திறக்காமல் இருந்த நேரத்தில், 750 கோடி செலவாகும் திட்டத்துக்கு கலைஞர் அரசு பிள்ளையார் சுழி போட்டிருக்கிறது.

முதல் முறையாக உலகளாவிய டெண்டர் விட்டப்பட்டதில், 2,965 கோடி ரூபாய்க்கு டி.வி. தயாரித்துக் கொடுக்க வீடியோகான், கிச்சன் அப்ளையன்ஸ், டிக்ஸன் டெக்னாலஜி ஆகிய மூன்று நிறுவனங்கள் முன் வந்திருக்கின்றன. முதல்முறையாக இந்தியாவில் கலர் டி.வி.யை அறிமுகப் படுத்திய வீடியோகான் நிறுவனம்தான் 15,000 டி.வி.களைத் தயாரித்துக் கொடுக்கப்போகிறது. தமிழக அரசின் எல்காட் நிறுவனம்தான் விநியோகிக்கப்போகிறது. அ.தி.மு.க. ஆட்சியில் கண்டுகொள்ளப் படாமலிருந்த அதிகாரி உமாசங்கர்தான் இப்போது எல்காட்டின் இயக்குனர்.

எதிர்பார்த்த மாதிரியே 21 இன்ச் டி.வி.க்குப் பதிலாக 14 இன்ச் டி.வி. தருவதா என்று அ.தி.மு.க. பொங்கியெழுந்திருக்கிறது. 'டி.வி.யின் சைஸ் பற்றி தேர்தல் அறிக்கையில் நாங்கள் எதுவும் சொல்லவில்லை என்று முதல்வர் சமாளித்துவிட்டார். திட்டத்திலிருக்கும் ஓட்டைகளை அ.தி.மு.க. உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருப்பதால் ஆளுங்கட்சி கூடுதல் கவனத்துடனே இருக்கிறது. டி.வி.க்காக ஆகும் தொகையில் ஒரு குறிப்பிட்ட தொகையைப் பயனாளியே ஏற்கும்படி செய்தால் 'இலவசம் தானே' என்று அலட்சியம் செய்யாமல் டி.வி.யைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்வார்கள் என்கிறார்கள்.

சன் டி.வி. மட்டுமே தெரிவதுபோலவும், டி.வி.யை ஆன் செய்தால் கலைஞரின் படம் வருவது போலவும் செட்டிங்ஸ் செய்யப் போகிறார்கள் என்று வரும் வதந்தியெல்லாம் நிஜமாகவே சாத்தியம்தானா என்கிற கேள்வியை ஆர்.எம். எலெக்ட்ரோ சிஸ்டம்ஸ் என்னும் நிறுவனத்தை நடத்திவரும் டிசைன் இன்ஜினியர் முருகையன் முன் வைத்தோம்.

“டி.வி.யை ஆன் செய்தால் ஏதாவது படமோ அல்லது வாசகமோ வருமாறு செய்வது சாத்தியம்தான். அதற்குத் தனியாக மெமரி தேவை. ஆனால், குறைவான விலைக்கு அதைச் செய்து தர முடியாது. பழைய மாடல் டி.வி. போல் ஏதாவது பத்து சேனல் மட்டுமே வருவது மாதிரி செட்டிங்ஸ் செய்யலாம். சன் டி.வி. மட்டும் தெரிவதுபோல் செய்ய முடியாது! டி.வி.டி. புரொவிஷன் பக்காவாக இருக்காது. அதனால் இந்த டி.வி.யில் டி.வி.டி. ப்ளேயரை இணைக்கும்போது படத்தின் குவாலிட்டி கம்மியாக இருக்கும். சவுண்ட் சிஸ்டம் ஸ்டீரியோவுக்குப் பதிலாக மோனோவில் வர வாய்ப்பு இருக்கிறது. மார்க்கெட்டில் உள்ள டி.வி.யை, கம்ப்யூட்டர் மானிட்டருக்கு



பதிலாகப் பயன்படுத்தலாம். ஆனால் அரசு வழங்கும் இந்த டி.வி.யை அவ்வாறு பயன்படுத்த முடியாமல் போகலாம். ஒரு சேனலிலிருந்து இன்னொரு சேனலுக்கு மாற ரிமோட்டைத் தட்டினால், குறைவான மெமரி காரணமாக, செயல்பாடு எதிர்பார்ப்பதுபோல் இருக்காது. டி.வி. என்றாலே அது 21 இன்ச் டி.வி.தான். 14 இன்ச் டி.வி. என்றால் அது போர்ட்டபிள் டி.வி.தான். மற்றபடி இப்போதெல்லாம் பிக்சர் டியூபுக்குக்கூட இரண்டு வருஷ கியாரண்டி கிடைக்கிறது. அதனால் கியாரண்டி கொடுப்பதிலும் பிரச்னையில்லை. ஐந்து வருடங்கள் வரைக்கும் அரசு தாராளமாக கியாரண்டி கொடுக்கலாம்" என்றார் முருகையன்.

முதல் கட்டமாக 30,000 டி.வி. அடுத்த மாதம் தயாராகிவிடும். திட்டத்தைச் செயல்படுத்துவதில் இருக்கும் நடைமுறைச் சிக்கல்களை அலசுவதற்காக ஏழு உறுப்பினர்கள்கொண்ட கமிட்டி சுறுசுறுப்பாக இயங்குகிறது. தொலைக்காட்சி இல்லாதவர்களைக் கணக்கெடுப்பதற்காக நகராட்சிகளிலும் கிராமப் பஞ்சாயத்துகளிலும் கமிட்டி அமைப்பதற்கான வேலைகள் விறுவிறுப்பாக நடக்கின்றன. எப்போதும் பரபரப்பாக இருக்கும் உள்ளாட்சித் துறை அமைச்சர் ஸ்டாலினுக்கு இலவச தொலைக்காட்சித் திட்டம் நல்ல பெயர் வாங்கிக் கொடுக்கும் என்று தி.மு.க. நம்புகிறது. சமத்துவபுரங்களில்தான் முதல் சுற்று வினியோகம்.

அடுத்த ஐந்தாண்டுகளுக்குள் தமிழ்நாட்டில் 100 சதவீத வீடுகளில் தொலைக்காட்சி வந்துவிடும் என்று எதிர்பார்க்கும் அதே நேரத்தில், பிஸினஸ் லைன் கட்டுரை சொல்லும் செய்தியையும் நாம் கவனிக்க வேண்டும் : தமிழ்நாட்டில் 65 சதவீத வீடுகளில் இன்னும் கழிவறையே இல்லையாம்!

- ஜெ.ராம்கி

# கலர் டி.வி.
# பராக்! பராக்!






காலெடுத்துக்
கும்பிடறேன்...
பெப்ஸி, கோக்
எனக்கு
வேணாம் சாமி!

படம் : ஸ்ரீஹரி

மங்கையர் மலரின்

# திருமண மலர்

இணைப்பிதழ்



## திருமண மலர் விளம்பரக் கட்டண விவரங்கள்

முதல் முப்பது வார்த்தைகளுக்கு ரூ. 500/-

30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா ரூ. 15/-

வண்ணத்தில் 'ஹைலைட்' செய்ய கூடுதல் கட்டணம் ரூ. 100/-

**1" X 1"** அளவில்
வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ. **800/-**
(அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ. **15/-**)

வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க **Profile** விளம்பரம் ரூ. **2500/-**

வண்ணப் புகைப்படம் அனுப்புபவர்கள், தெளிவான புகைப்படமாக, பாஸ்போர்ட் அளவில் இரண்டு பிரதிகள் அனுப்பவும். புகைப்படங்களை திருப்பி அனுப்ப இயலாது.

கட்டணத்தை, நேரில் ரொக்கமாகவோ அல்லது சென்னை செக்காகவோ, வெளியூர் டிமாண்ட் டிராப்டாகவோ, "மங்கையர் மலர்" என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

*விவரங்களுக்கு தொடர்பு கொள்க:*

மங்கையர் மலரின் திருமண மலர்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032. தொலைபேசி: 2225 1522 / 2225 1324
Fax: 044-2225 1021 email: marketting@kalkiweekly.com

